ஸ்ரீ

ராமஜெயம்.

---

ஸ்ரீருத்திரபகவான்

பார்வதியாருக்கு உபதேசித்த

# ஏகாதசிமகத்துவம்.





சென்னை-இட்டா

பார்த்தசாரதி நாயுடு

அவர்களாற்றமது

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1902.

சென்னை-நுச்சாரப்பன்செரு. 84-வது-கெ.



ஸ்ரீ









ஸ்ரீமதேராமாநுஜாயநமா,

# ஏகாதசிமகத்துவம்

—[*]—

## தனியன்கள்,

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொன்பூத்தபராரைநறும்பூம்புளியாய்க்குருகைநகர்
போந்நாங்காண்ட
மன்பூத்தபுதுமறைசேர் வேதியர்தங்குலவிளக்காய்
வந்துவானோர்
மின்பூத்தவெண்மதிச்செஞ் சடையானுந்தொழுமரங்க
விமலற்கந்தாள்
பொன்பூத்ததமிழ்மறையின் பொருள்விரித்தமுனியரசைக்
குழித்துவாழ்வாம்.

மறந்செய்பெரும்பல்சமய முரணழியப்பிணக்கறுத்து
வயங்குநான்மைத்
திறந்செய்பழமறைமுடிவின் றுணிபரஞ்சேர்ப்பாடியமுன்
செய்வான்செம்பொன்
நிறஞ்செய்மதிதொடுபுரிசைப் பூதூர்க்கண்வந்தருளு
விமலஞான
அறஞ்செய்பரசமயகோ ளரியிணைத்தாளெஞ்ஞான்று
மகத்துள்வைப்பாம்.

பூவிருமான் மடப்பத் தேட்டெகினப்புள்வடிவாய்
பெயலித்துதெய்வப்
பாவிருமா வேதப் பழம்பொருளைமுனமுரைத்த
பரிமானத்
தேவிருமா ற்மறையை மதுரகவிமுனிவனுக்குத்
தெரித்தருங்கள
காவிறளைசூழ்கமல மளக்கமலர்பிறக்கமல
கலித்துசேர்வாம்

பன்மைசான்மெய்ஞ்ஞானப் பனுவலுணர்முனிவர்குழாம்
பரவவன்றோர்
வன்மைசான்மனத்தையை மொருவயீமிசைச்செவ்வே
வலக்கைபோச்சி
மன்மைசான்வேதத்தி னுங்கொருநூற்பிறிதில்லா
வான்மைபோலொய்
மின்மைசால்கேசவனிற் பெருந்தேவின்றெனுமுனியை
யிறைஞ்சுவாமால்.

---

## ஏகாதசி துவாதசிகளின் வரலாறு.

---

சூரியவம்சத்திலகனும் அயோத்திபர்நகரத்தை யாளுகின்ற திலீபச்சக்கரவர்த்தி வசிஷ்டமஹாரிஷியைப் பிரணாமஞ்செய்து ஸ்ரீரமபதசாதனமாகிய வைதிகரகசியங்களை அடியேனுக்குப் பிரசாதித்தருளவேண்டுமென்று பிரார்த்திபாநின்ற திலீபச்சக்கரவர்த்தியைப் பார்த்து வசிஷ்டமகாமுனிவர் சொல்லியருளுகின்றார் கேளாய் திலீபச்சக்கரவர்த்தியே நைமிசாரணிய வாசிகளாகிய சௌனகாதி மகாரிஷிகள் உதயகாலத்திலெழுந்திருந்து வழக்கப்படிப் பரிசுத்தநீராடிக் கேசவாதி துவாதச திருநாமங்களை யுச்சரித்துப் பன்னிரண்டு திருமண்தரித்துத் திருவஷ்டாட்சரத்தைச் செபித்து நித்தியக்கடன்களை முடித்துக்கொண்டு சூதபுராணிகரைநோக்கி மோக்ஷசாதனமாகிய பரமரகசிய தர்மத்தைச் சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்திக்கச் சூதபுராணிகர் அந்த முனிசிரேஷ்டர்களைப்பார்த்துச் சொல்லுகிறார் வாருங்கோள் முனிசிரேஷ்டர்களே பூர்வத்தில் இவ்வாறுகேட்ட பார்வதிக்குக்

காளகண்டி திரிநேத்திரராகிய ருத்திரபகவானவர் உபதேசித்த பரமசிவ தர்மத்தை உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொல்லுகின்றார்.



## ஸ்ரீருத்திரபகவானுடைய வாக்கியம்.



வாராய் பார்வதி ! சர்வேஸ்வரனுடைய கூர்மாவதார வைபவத்தையும் சர்வேஸ்வரியாகிய மகாலட்சுமிபவதாரக்கதையும் ஏகாதசிவிரதவரலாற்றையும் அதன்மகாத்துமியத்தையும் சொல்லுகிறேன் அதிவினய பக்திபூர்வமாகக்கேட்கக் கடவாயென்று சொல்லுகிறார் அத்திரிமகாரிஷியினுடைய புத்திரராகியும் சமஸ்தலோகங்களும் பயப்படத்தக்க சோபிஷ்டராயும் என்னுடைய அம்சத்தில் தோன்றினவராயும் ஸ்ரீஹரியினுடைய திவ்யசரணாரவிந்தங்களிலேயேவைத்த சிந்தையையுடையவராயும் விளங்குகின்ற துருவாசமகாரிஷியானவர் மகாமேருகிரியிலே வித்தியாதரர்கள் வாசஞ்செய்யாநின்ற பாரிசத்தை யடைந்து அந்தக் கின்னரர்களாலே பூசிக்கப்பட்டவராய் அவ்விடத்தில் ஒருவருஷம் வாசஞ்செய்துகொண்டிருந்தனர், ஒருநாள் வைகுந்தத்திற் சென்று ஒருவித்தியாதர ஸ்திரீயானவள் சமஸ்தலோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரராயும் பரமாத்மாவாயும் இராநின்ற விஷ்ணுவினுடைய

திருமார்பத்தி லெழுந்தருளியிருக்கின்ற மகாலட்சுமிதேவி ஆனந்திக்கும்படியாய் லாகிந்துநிர்த்தப்பிரசாதம் லபிக்கப்பெற்று லோகநாயகியினுடைய பாதாரவிந்தங்களில் தரித்தபூமாலையை யாழிலகட்டிக் கொண்டு வருகிறதை இந்தத்துருவாசரிஷியானவர் கண்களிக்கக் கண்டு அந்தவித்தியாதர கன்னிகைக்குத்தெண்டனிட்டு அம்மாலையைப்பெற்றுக்கொண்டு இந்திரலோகத்துக் கெழுந்தருளிச் சமஸ்ததேவர்களும் ரிஷிகளும் புடைசூழ்ந்துவரச் சங்கீதங்கள வாத்தியங்கள் முழங்க ஐராவதத்தின்மேல் பவனிவருகிற இந்திரனைக்கண்டு இந்தமாலையைக்கொடுக்க அவன் இந்தமாலையின் பிரபாவத்தை யறியாமல் தன் அங்குசத்தினால் வாங்கித் தானேறிவருகின்ற யானையின் மத்தகத்தின்மேல் வைத்துவிட அதையந்த மத்தகஜமானது தும்பிக்கையாலெடுத்துப் பூமியிலெறிந்து தனதுபாதங்களால் மிதித்தது அதுகண்டமாத்திரத்தில் அந்தமகாரிஷியினுடைய புருவங்கள்நெரிய இரண்டுகண்களுஞ்சிவந்து சமஸ்ததேவமுகங்களும பிரம்மகல்பாந்தகாலமோ அல்லவோவென்று திடுக்கிட்டுப்பயந்து சிதறியோடும்படி அதிகோபத்தையடைந்து இந்திரனைப்பார்த்து ஓஇந்திரா யாருடைய கடாக்ஷவீக்ஷண்யத்தினால் பிரமனும்மேயும் சங்கரனும்சிருஷ்டிதிதி சங்காரமாதிய தொழில்களைப்பெற்றுலோகேஸ்வரர்களாயிருக்கின்றீர்களோ அந்த மகேஸ்வரியினுடைய பிரசாதமாகிய புஷ்பமாலையை நான்செய்த தவப்பலத்தினாலே பெற்றுநீ இப்போதுவருகிற பவனிமகோற்சவத்தைக்கண்டு சந்தோஷித்து உனக்குக்ஷேமமுண்டாகும்படிக் கொடுத்தேன் அதைநீ அநாதரஞ்செய்தபடியால உன்னுடைய திரிலோகஐஸ்வரியமும் க்ஷீணித்துப்போய்த் துன்பமடையக் கடவாயென்று மேகர்ச்சனைபோல அதட்டிச் சாபமிட்டனர். உடனேசத்துசித்து ஆனந்தமே திருமேனியாகவுடைய ஸ்ரீஹரியின் திருமார்பில் வீற்றிருந்துகொண்டு விதிசிவாதிசமஸ்த ஜீவகோடிகளுக்கும் தாங்கள்செய்த வினைக்குத்தக்கபடித் தநுகரணபுவனபோகங்களைக் கொடுத்தருளுகின்ற பெரிய பிராட்டியாருடைய இலேசாம்ச அவதாரமாய் இந்திரலோகத்தி லெழுந்தருளியிருக்கும் மகாலட்சுமி தன்னிச்சையாகவே அந்தர்த்தானமாயினள். கல்பவிருக்ஷ காமதேனுவாதி சகல வைபவங்களுந் திருப்பாற்கடலை யடைந்துவிட்டன. ஏதேச்சையாக மகாலட்சுமியான

வள் மறைந்துவிட்டவுடனே பிரமனும், நானும் மற்றதேவர்களும் கந்தருவர்களும் யட்சர்களும் பக்ஷபட்சி விருட்சமுதலிய சமஸ்தபிராணிகளும் அந்தப்பராசத்தியினுடைய கடாட்சமில்லையபடியால் யாதொரு செயலுமில்லாமல் பசிதாகமுதலியவர்றால் பிடிக்கப்பட்டுச் சர்வகாலமும் துக்கத்தையே அநுபவித்துக்கொண் டிருந்தோம்,

வாராய் ஹரியினுடைய அநந்தகல்யாண குணாநுபவத்திலேயே பிரியமுள்ள சகுணவதியாகிய பார்வதி அப்போது திரிபுவன கர்த்தாவாகிய இந்திரனானவன் முனீந்திரர்களோடும் தன்பரிவாரங்களோடும்வந்து என்னை அடைக்கலமடைந்து முறையிடநானும் என்னுடைய பரிவாரங்களோடு அந்தத்தேவர்களை அழைத்துக்கொண்டு பிரமதேவனிடத்தில் சரணாகதஞ்செய்து முறையிட்டேன் அவர் என்னால் என்னசெய்யத்தக்கது அகிலலோகேஸ்வரர்களுக்கும ஐஸ்வரராயும் பரமராயும் விளங்காநின்ற ஸ்ரீபதுமநாபரையல்லாமல் கம் மெல்லோருக்கும் வேறே திக்குமுண்டோ வாருங்கோள் தேவர்களே முனிவர்களே யென்று அழைத்துக்கொண்டு திருப்பாற்கடலின் வடபக்கத்தில் சேர்ந்து மந்திராசமாகிய திரு அஷ்டாட்சரத்தினாலும் பரமேஸ்வரராகிய ஸ்ரீமந்நாராயணரைத் தியானித்தோம் தியானித்துக்கொண் டிருக்கையில் பக்தபராதீனராகிய ஹரியானவர் திருமுடியில் மாணிக்கமயகிரீடமும் செவிகளில் மகரகுண்டலங்களும், வெண்டாமரைபோன்ற நேத்திரங்களில் கருணையும். திருமார்பில் ஜகன்மாதாவாகிய பெரிய பிராட்டியாரும் கௌஸ்துவாபரணமும், வனமாலையும் திருக்கைகளில் சங்குசக்கரங்களும், அபயவாதமும் திருவரைமினிடத்துப் பீதாம்பரமும், பிரமன்முதலிய சமஸ்தபிராண சமூகங்களும் ஆதாரமாகிய திருவடிகளில் வேதச் சிலம்புகளும் பிரகாசிக்க வேதமே சொரூபமாகிய கருடன்மேல்ஆரோகணித்துப் பிரசன்னராய் எழுந்தருளினர், எழுந்தருளினமாத்திரத்தில் நாங்களெல்லோரும் பொருக்கென எழுந்து கண்களில் ஆனந்தபாஷபம் ஒழுகத் தண்டாகாரமாகப் பூமியில்விழுந்து சேவித்து மாதவா, கோவிந்தா வாசுதேவா, திருவிக்கிரமா வென்று பலவாறுடைய சகஸ்திரநாமங்களால் தோத்திரஞ்செய்து முறைமுறைபாகஅஞ்சலித்தர்களாய் நின்றுகொண்டிருக்க பரந்தாமனானவர் எங்களைப் பார்த்து வாருங்கோள் என்னுடைய தாசர்களாகிய பிரமாதி தேவர்களே பரமரிஷிகளே உங்களுடைய மனோபீஷ்டத்தை நிறைவேற்றுகிறேன் பயப்படவேண்டாம் மகாலட்சுமியானவள் சுவர்க்கலோகத்தைவிட்டு அந்தர்த்தானமாய்த் திருப்பாற்கடலை யடைந்தபடியால் சமஸ்தலோகங்களுந் துக்கத்தையடையும்படி ஆயின, அந்தமகாலட்சுமி

திருவவதாரநிமித்தம் திருப்பாற்கடலைக்கடையவேண்டும் ஆகையால் நீங்களும் தானவர்களுமாகச்சென்று மந்திரகிரியை மத்தாகநட்டு வாசுகியைத் தாம்பாகச்செய்து பரிசுத்தநீராடி எம்முடைய பன்னிரண்டுதிருநாமங்களை உச்சரித்துக்கொண்டு திருமண்தரித்து லட்சுமிசமேதனாக என்னைப் பாவனைசெய்து இந்திரியங்களையடக்கி ஆகார நித்திராதிகளையொழித்து மனதை எம்முடைய திருவடியிற்செலுத்தி புருஷசூக்தத்தை வாயினால் செபித்துக்கொண்டு எம்முடைய சக்தியினால் புஜபலத்தைப்பெற்றுத் திருப்பாற்கடலைக் கடையுங்கள் நான் கூர்மாவதாரமாய் அந்தப்பர்வதத்தைச் சகலவிதம் தாங்குகிறேம் நீங்கள் க்ஷேமத்தை யடையப்போகிறீர்கள பயப்படவேண்டாமென்று திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினர்.

பரமசுவாமியினுடைய கட்டளையைச் சிரசாகவகித்துப் பிரமன் முதலாகிய தேவர்களும் நாலும் பரமரிஷிகளுந் தானவர்களோடு சென்று மேற்றியபிரகாரப்படி நீராடி திருமண்தரித்துப் பகவந்நாமங்களைச் செபித்துக்கொண்டு மந்தரகிரியைத் திருப்பாற்கடலில் நட்டு வாசுகியைத் தாம்பாகச்செய்து மகேஸ்வரியாகிய லட்சுமி சமேதனாக புருஷோத்தமனைப் பாவனைசெய்து புருஷசூக்தத்தை உச்சரித்துக்கொண்டு பெரியபிராட்டியாருடைய அவதார நிமித்தம் விஷயங்களில் செல்லவொட்டாமல் மனதை ஒருமைப்படுத்தி கமலாட்சருடைய சரணாரவிந்தங்களைத் தியானித்து ஆகாரநித்திரைகளை யொழித்து உபவாசமிருந்து திதிகளில் உத்தமமான ஏகாதசியில் கடைகின்றபோது பகவானானவர் கூர்மாவதாரமாய் அந்தப் பர்வதத்தை முதுகிலே சுமந்து சாயவொட்டாமல் ஒருபுஜசக்தியினால் அதன் சிகரத்தைப் பற்றிக்கொண்டு நின்றனர் அப்படி பிரமன்முதலாகிய தேவர்களும் நாலும் முனிச்சிரேஷ்டர்களும் பிராமணோத்தமர்களும் தானவர்களும் மகாலட்சுமியினுடைய அவதாரத்தைக் கோரினவர்களாய் இருபுறமும் நின்று கடைந்துகொண்டிருக்கையில் முதலிலே காலகூடவிஷம பிரளய காலாக்கினிக்குச் சமானமாகப்பிறந்தது, அதுகண்டு இந்திரன் முதலானவர் ருஷிகளும், பிராமணோத்தமர்களும், தானவர்களும், பிராணபயமடைந்து ஓடத்தலைப்பட்டார்கள் அங்கோடுமென்ற தேவர்முதலிய சமூகங்களைப்பார்த்து நீங்கள் பயந்து ஓடவேண்டாம் அந்த விஷத்தை நானே புசிக்கின்றேனென்று அவர்களுக்கு வாக்குக் கொடுக்க அவர்கள் என்னைத் துதிசெய்துக்கொண்டு நின்றனர் நானாய் ஹரியவதாரங்களில் பக்தியுள்ள கௌரி சகஸ்திர பாலருசிர்களுக்குச்சமானமானவராயும் தேவி பூதவிசமேதராயும் இருக்கின்

காருடவாகனனை மனதிலே தியானம் பண்ணிக்கொண்டு சர்வதுக்கங்களையும் நிவர்த்திபண்ணுகின்ற நாமத்திரைய மகாமந்திரத்தைச் செபித்துக்கொண்டு அந்தச்சர்வலோகபயங்கரமாகிய காளகூட விஷத்தை நான்பானம் பண்ணுகிறகையில் பக்தரட்சகராகிய அரியானவர் எனக்குள் அந்தரியாமியாய்நின்று அதைத்தாமே கபளீகரித்தனர் அச்சுதானந்தகோவிந்தா என்றுபிரணவத்தை முதலிலும் நமவென்னும் பதத்தை அந்தத்திலும்வைத்து யாவனொருவன் பக்தியினாலே செபிக்கிறானோ அவனுக்குமிருத்தியுபயம் விஷரோகம் அக்கினி முதலானதுகளாலே உண்டாகிற பயமில்லை என்பதற்குச் சந்தேகமுமுண்டோ இப்படிக் காளகூட விஷமானது நாமத்திரைய பிரபாவத்தால் ஜீரணமாய் விட்டபிற்பாடு சமஸ்ததேவ முதலானவர்களும் பயமில்லாதவர்களாய்த் திரும்பிவந்து திருப்பாற்கடலைக் கடைந்துகொண்டிருக்கையில் அசுத்தமானவளினுடைய அமிசத்தினால் சிவந்த வஸ்திரமும் சிவந்தபுட்பமாலையுமுடையவளாய்ச்சேஷ்டாதேவி உண்டாகி என்னால என்னசெய்யத்தக்கதென்று எங்களைக்கேட்க அந்தச்சேஷ்டாதேவியைப்பார்த்து நாங்களெல்லோரும் வாராய், கலிகாலபுருஷனுக்கு இஷ்டமுள்ள அமங்கல சொரூபியே யாவனொருவன் ஸ்ரீயப்பதியைத் தியானிக்காமலும் அவருடைய அடியார்களைக்கண்டு வணங்காமலும் நடைப்பிணமாகத் திரிகின்றானோ அந்தப்பாவியினிடத்திலும் எந்தக்கிரகத்தில் நித்தியகலகம் உண்டாகிறதோ அந்தக்கிரகத்திலும் எவனினமும் குரூர வார்த்தைகளையும் அபத்தத்தையும் பேசுகிறானோ அவனுடைய கிரகத்திலும் எந்தமனுஷன் அந்திப் பொழுதில் நித்திரைசெய்கிறானோ அவனுடையகிரகத்திலும் எந்தப்புத்தியீனன்பாதசுத்திபண்ணாமல் ஆசமனமும், பல்ஓடு கல்மணல். இருப்புகோல் இதுகளாலே தந்ததாவனமும் பண்ணுகிறானோ அவனுடைய கிரகத்திலும் நிவாசமாய் இருக்கக்கடவாய் வாராய் துக்கதாரித்திரியங்களை நேத்திரங்களாக வுடையவளே எவ்விடத்தில் தலைமயிர் பஸ்பம் அஸ்தி உமித்தழல் உண்டோ அவ்விடத்திலும் எந்தமனுஷனுடையதேகத்தில் ஒரு எலும்புசாம்பல்கள் இதுகளினுடைய சின்னங்கள், இருக்கின்றனவோ அந்த மனுஷனிடத்திலும் எந்தமூடமதிகள் பிண்ணாக்கு கஞ்சா முள்ளங்கி ஈர்க்கு, கோவைக்காய் முருங்கை செப்பிர்க்கு சுரைக்காய்விட்டு வராகம் வில்வக்காய் உல்லிப்பூண்டு இவற்றைப் பட்சிக்கிறார்களோ அவர்களுடைய கிரகத்திலும் அசுபத்தேடு கூடி வாசஞ்செய்யக்கடவாய் வாராய், தாரித்திரிய பிரியையாகிய மூதேவி

யே விஷ்ணுவும் இல்லாத இடத்திலும் துளசியில்லாத நந்தவனத்தி லும் திருமட்குறியும் சங்குசக்கிராங்கிதமும் இல்லாததோஷியினிடத் திலும் குதூகலத்தோடு வசிக்கக்கடவாயென்று கட்டளையிட்டோம் ம றுபடியுங் கடையும்போது வாருணிதேவி யுண்டானாள் அவளை ஆதி சேஷனும் அவளுக்குப்பின்னே தோன்றிய சந்திராதேவியைக் கருட பகவானும் திருமணம் புணர்ந்தார்கள். பின்பு திவ்விய ரூபத்துடைய அப்சரஸ்திரீகணங்களும கந்தர்வர்களும் உதையமானார்கள் அப்புற ம் ஐராபவமும் உச்சைசிரவ அசுவமும அமிர்த கலசத்தோடு தன் வந்திரியும் கற்பகமும் காமதேனுவும் உண்டாயின பகவானுடைய அ வதாரமாகிய தன்வந்திரிதவிர மற்றவஸ்துக்களை யெல்லாம் இந்திரன் பெற்றுக்கொண்டான் பின்பு ஆகாரநித்ராதிகளை யொழித்து உபவா சமாய் புருஷசூத்தத்தைச் செபித்துக்கொண்டு கடையா நிற்கும்போ தும றுநாள் துவாதசிதிதியில் சூரியோதயசமையத்தில் பிரமதேவனு க்கும் சங்கரனுகயே எனக்கும் மற்றப்பிராணகோடிகளுக்கும் தாயாயு ம் சர்வலோகேஸ்வரியாயும் லீலாவிபூதிக்கு நாயகியாயும் விளங்கா நி ன்ற மகாலட்சிமியானவள் திருவவதரித்த அந்த ஜகன்மாதாவினுடை ய திருவவதாரத்தைக் கண்டமாத்திரத்திலே பிரமன்முதலாகிய சமஸ் ததேவர்களும் நானும் பரமரிஷிளும் பிராமணோத்தமர்களும் ஹரி ஹரிஹரியென்று வாயால்துதித்துக கண்களில் ஆனந்தபாஷ்பம் ஒழு கும்படிப் பூமியில்விழுந்து சேவித்துத் தோள்களைத் தட்டிக்கொண்டு அங்குமிங்குமாக ஓடியும நர்த்தனஞ்செய்தும் தேவதுந்துமி முதலிய வாத்தியங்களை முழக்கியும் திவ்யதுதிகளைச் செலுத்திக்கொண்டுவி ட்டுப் பிரிந்தபசுவைக்கண்ட கன்றுகளைப்போல நாங்களெல்லோரும் பரமாநந்தத்தை யடைந்தோம் அதற்குமுன் அடங்கியிருந்த வாயு ம னோகரமாய்வீசியது ஒளிமழுங்கியிருந்த சூரியனும் அக்கினியும் அதி பேராசையுடையவர்களாய்ப் பிரகாசித்தார்கள் திக்குகள் நன்றாய் வி ளங்கின அதற்குமேல் மகாலட்சுமிக்குப் பிராதாவாகவும், நட்சத்திர ங்களுக்கு அரசனாகவும் சகலலோகங்களுக்கும் அம்மானாகவும் அமிர் த கிரணங்களையுடைய சந்திரன் உண்டானான், பின்பு லோகபவானி யாயும் புண்ணிய ரூபியாயும் இருக்கிற துளசிதேவி ஸ்ரீஹரிக்கு அர்ச் சனைநிமித்தம் அவதரித்தாள்பிரமருத்திராதிகளாகிய நாங்களெல்லோ ரும் இஷ்டசித்தியடைந்தவர்களாய் அந்தமந்த்ரபர்வதத்தை முன்னி ருந்த இடத்திலேதானே கொண்டுபோய் வைத்துவிட்டோம் பரம ப தியாகிய பரந்தாமரானவர் எங்களுக்குப் பரமமாதாவாகிய மஹாலட் சுமியைத் திருமணம்புணர்ந்து அந்தத்திருத்துழாவாலே அர்ச்சிக்கா

நின்ற எங்களெல்லோருக்கும் வேண்டியவரங்களைக் கொடுத்துச்சொல்லுகின்றார்,

வாருங்கோள் பரமபாகவதர்களே சகல உபத்திரவங்களையும் நசிக்கச்செய்கின்ற ஏகாதசியானது மஹாலட்சுமிதரிசனார்த்தமாக உங்களால் உபவாசஞ்செய்யப்பட்டது இன்றுமுதலில் உங்களுக்குச் சமஸ்தலோகங்களுக்கும் இந்தஏகாதசியானது உபவாசதினமாய் ஆகக்கடவது வாரீர் விதிசிவாதிதேவர்களே ரிஷிகளே பிராமணோத்தமர்களே என்மார்பினிடத்தில் வசிக்கின்ற மகாலட்சுமியையும், என்னையுந் திருத்துழாயாலே அர்ச்சித்து பூசித்து அந்தத்திருத்துழாயோடு அமிர்தபானஞ்செய்த தினமாகிய துவாதசியானது எப்போதும் எனக்கு இஷ்டமாக நிற்கின்றது ஆகையால, எவர்கள இன்றுமுதல் ஏகாதசியில் உபவாசமிருந்து துவாதசிசூரியோதயத்தில பரமபக்தியோடு திருத்துழாயினால் மகாலட்சுமியையும் என்னையும ஆராதிக்கிறார்களோ அவர்கள்சகல கர்ம பந்தங்களையும் விட்டுவிலகி என்னுடைய இருப்பிடமாகிய பரமபதத்தையடைவார்கள் எவர்கள்ஏகாதசியில் புசிக்கிறார்களோ எவர்என்னைத்துவாதசியில் ஆராதிக்கவில்லையோ அவர்களுக்கு நரகத்திலே வாசமுண்டாகும் அதற்குசந்தேகமில்லையென்று திருவாய்மலர்ந்தருளித் திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மீது யோக நித்திரையி லெழுந்தருளினர் பின்புநாங்களெல்லோரும் கூர்மரூபியாகிய பகவானைமிகவும் பக்தியோடு பூசித்துவணங்கித் தோத்திரஞ்செய்ய அந்தக் கூர்மரூபியாகிய சர்வேஸ்வரனானவர் பிரசன்னராய் எங்களைரட்சித்து வாராய. சதுர்முகனே வாராய்சங்கரனே, வாராய் இந்திரனே, வாருங்கோள்தேவர்களே, ரிஷிகளே உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேட்கக் கடவீரென்று திருவாய்மலர்ந்தருள நாங்களெல்லோரும் கூர்மரூபியாகிய சர்வலோகசரணியனைப் பிரணாமஞ்செய்து உம்முடைய தாசர்களாகியஎங்கள்நிமித்தம் மந்திரகிரியைத் தாங்கினற்போல இந்தப்பூமியையும பரித்துஉம்முடைய சொத்தாகியஎங்களையும் எங்களைபொத்த மற்றஜீவகோடிகளையும் கைவிடாமற் காப்பாற்றவேண்டுமெனத் தெண்டனிட்டுக் கைகளைக்கட்டிக்கொண்டு முறைமுறையாக நிற்கின்ற எங்களுக்குக் கருணைகூர்ந்து அப்படியே செய்கிறேனென்று வரங்கொடுத்து இந்தப்பூமியைப் பரித்தருளினார் பின்புஎனது தந்தையாகிய பிரமதேவருடைய கட்டளையின்படி நானும்இந்திரனும தேவர்களும்மனுஷியர்களுமதங்கள்தங்கள் இடத்துக்குப்போய்ச் சேர்ந்தோம அன்றுமுதல் பிரமதேவனும் நானுமமற்றச் சகல தேவர்களும் பிராமணர்கள்முதலிய மனுஷிய சிரேஷ்டர்களும் சர்வே

ஸ்வரனுடைய கட்டளையின்படி ஏகாதசிதோறும் உபவாசமிருந்து து
வாதசியில சாஸ்திரப்படி ஸ்ரீயப்பதியை ஆராதித்துக்கொண்டு வருகி
றோம் நாங்களெல்லாருந் திருப்பாற்கடலைக்கடைந்த நாள்முதற்கொ
ண்டு ஏகாதசிக்கு ஹரிதரிசனம் ஹரிவாசரம் என்றும பேர்வழங்குமெ
ன்று சொல்லுகிற ருத்திரபகவானைப்பார்த்துப் பார்வதிசொல்லுகி
றாள் ஸ்வாமீ. எம்பிரானை நாயகராகிய சக்கரபகவானே துவாதசியினு
டைய பிரபாவத்தையுங்கேட்க என்மனம் அபேக்ஷை கொள்ளுகின்ற
து அதையும்விரித்துச் சிவபெருமானவர் சொல்லுகின்றார்,

வரலாறு முற்றிற்று.

---



## ஏகாதசி அனுஷ்டிப்பு.

### ஸ்ரீருத்திரபகவான் வாக்கியம்.

---

வாராய், உமாதேவி துவாதசியினுடைய பிரபா அஸ்தமனமான
மாத்திரத்தில் சர்வேஸ்வரனானவர் நிருவாண மூர்ப்பாகிறார் ஏகாதசி
உபவாச மாத்திரத்தால் சகல பாபங்களில் நின்றும் விடுபட்டு விரதி
சயாகத்து பரமபதத்தை யடையக்கூடும் துவாதசி ஹரியினுடையபில

திருவாராதனத்தை கோடிப்பொழுதுகாலம் செய்தபோதிலும் அத
னாலே அனேகம்பிறப்புகளில் பதினொரு இந்திரியங்களாலும் அறிந்
து அறியாமலுஞ் செய்திருக்கிற கர்மங்களையெல்லாம் அழித்துவிடும்
அநேகமாயிரம் அஸ்வமேதங்களின் பலமும் ஏகாதசி உபவாசபலத்
தில் ஆயிரத்திலொருகூறுக்குஞ் சரியாகமாட்டாவாம் மாதாய் பார்வ
தி, துவாதசியானது அறத்தையும், பொருளையும், இன்பத்தையும்,
மோக்ஷத்தையும், மற்றச் சர்வாபீஷ்டங்களையுங் கொடுப்பதாய் விளங்
குகின்றது ஏகாதசி விரதத்தைப்போலப் பாபத்திலிருந்தும் ரக்ஷிப்ப
து வேறொன்றுமில்லை ஆகலால் அரிவாசரத்தின் உபவாசத்துக்குச்
சமானமான வேறொரு விரதமில்லை ஏகாதசி விரதத்தைவிட்டு மற்ற
விரதங்களை யநுஷ்டிப்பவன் தன் கையிலிருக்கிற உத்தம போஜனத்
தைவிட்டுப் பிச்சை எடுக்கிறவனுக்குச் சமானமானவன் சமஸ்த இதி
காச புராணங்களும், பஞ்சராத்ரங்களும் வைதிகவிரதமாகிய ஏகாத
சியைக் கொண்டிருக்கவுமொருவன்றான் முன்னமே செய்துவிட்ட பாப
கர்மங்களைக் குறித்துப் பயப்படுவானேயென்று சொல்லுகின்றன
எந்த மூடாத்துமாவானவன் ஏகாதசி விரதத்தை யநுஷ்டிக்கவில்லை
யோ அவன் பரமபதத்தை யடையப்போகிறதில்லை ஏகாதசியில் உப
வாசமிருக்கின்ற மகாவிரதசீலனே அத்தினத்தில் போசனஞ் செய்யெ
ன்று சொல்லுகிற அதமபுருஷனுக்கும் பிராமணனையுஞ் சிசுவையும்
ஸ்திரீயையும் கோவையும் அதமபாவமென்று சொல்லுகிற பாபாத்
துமாவுக்கும் வித்தியாசமென்ன ஏகாதசியிலே தன்னையடைந்த
து வைதிகபதத்தினுடைய புரோடாசமானாலும் அதில் சிறிதும் உண்
ணலாகாதென்று இதிகாச புராணங்கள் சொல்லுகின்றமையால்
அன்னத்தைப் புசிக்கலாகாதென்பதற்குச் சந்தேகமேன் பிராமணாதி
வருணங்களுக்கும் பிரமசாரியாதி ஆசிரமத்தாருக்கும் ஸ்திரீகளுக்கும்
ஏகாதசியில் உபவாசமிருக்கிறது முக்கியகடமையாய் இருக்கின்றது
முக்திசாதனமாகிய ஏகாதசியில் மாதா பிதாக்களுடைய சிராத்தம்
வந்தபோதிலும் அந்தச் சிராத்தத்தை நிறுத்திவைத்து அரிதின
உபவாசத்தை நிறைவேற்றி மறுநாள் துவாதசியில் அக்கருமத்தை நட
த்தவேண்டும் பிதிர்தேவதைகளும் பிரமன் முதலாகிய தேவர்களும்
நாளும் ஏகாதசியில் சித்தமான அன்னத்தைப் புசிக்கமாட்டோம்
ஆசையால் அந்தச் சிராத்தமானது ஏகாதசியிற் செய்தால் வியர்த்த
மாயவிடும் எப்போதும் ஏகாதசியில் அன்னத்தைப் புசியாமலும் மத்
தியபானம் பண்ணாமலும் பிராணவதை செய்யாமலும் இருக்கவேண்
டுமென்று வேதஞ்சொல்லுகின்றது.

வாராய் கௌரி, தசமி வேதையோடுகூடிய ஏகாதசிவிரதத்தை அன்றையதினம் பிரயத்தன பூர்வகமாய்விட்டுவிடக்கடவன் சூரியோதயசமையத்தில் திரயோதசியினன்றைக்குத் துவாதசி காலமாத்திரமிருந்தாலும் அப்போது துவாதசி உபவாசத்தை மேற்கொண்டு சமஸ்தகர்மத்தையும் ஆசரித்து பாரணை பண்ணக்கடவன் ஏகாதசி விரதத்தையாவது விட்டுவிட்டபோதிலும் துவாதசி விரதத்தை விடாது ஆசரிக்கக்கடவன் இதில் யாதொரு சந்தேகமும் வேண்டியதில்லை துவாதசியில் அருணோதய சமையத்திலே ஏகாதசி காலமாத்திரமிருந்தால் முந்தின ஏகாதசியை ஆசரிக்காமல் துவாதசியிலேயே ஏகாதசி விரதத்தை அநுஷ்டிக்கக்கடவன் அவன் இவையெல்லாம் வேத இதிகாச புராணாகமாதிகளின் கருத்தாகும ஹரிதினமாகிய ஏகாதசிவிரதத்தை தசமியினன்றே தொடங்கி அன்று இராத்திரியும் ஏகாதசி முழுமையும், துவாதசி சாயங்காலமும் ஆக நான்குகால போசனமும்பண்ணாமல் தசமியில் ஒருவேளை போசனஞ்செய்து ஸ்திரீயோடு கலவாமல தனியே சுசியானதரையில் சயனித்தும் இந்த உபவாச தினங்களிலே நெல்லிப்பருப்பைச் சரீரத்தில் பூசிக்கொண்டு ஒருநதியில் ஸ்நானஞ்செய்து உபவாசமிருந்து இராத்திரியிலும் சர்வேஸ்வரராகிய ஹரியை ஆராதிக்கக்கடவன இந்த வைதிக விரதத்தை யநுஷ்டிக்கின்ற வைஷ்ணவனானவன் தசமி ஏகாதசி துவாதசியாகிய மூன்று தினங்களிலும் பாஷண்டனையும் கர்மநாசனையும் பதிதனையும் சண்டாளனையும் பாராமலும் சம்பாஷணைஞ்செய்யாமலும் இருக்கக்கடவன் பிராமணனயிருந்தும் விஷ்ணுபக்தியில்லாதவன பாஷண்டனென்றும் சிகையக்கியோபவீதங்களை விட்டுவிட்டவன் கர்மநாசனென்றும் மகாபாதகம் உபபாதகம் இவைகளைச்செய்கிறவன் பதிதனென்றும் அன்னியபிஜத்துக்குப் பிறந்தவன் சண்டாளனென்றுஞ் சொல்லப்படுவார்கள்.

வாராய் அம்பிகாதேவி ஏகாதசியிரவில் அரியைத் திவ்ய வஸ்திராபரணங்களால் அலங்கரித்துச் சுகந்த புஷ்பாதிகளைச் சாத்தி தூபதீபங்களால் ஆராதித்து பக்தியோடு பாரதந்திரஞானத்தால வேதகானஞ்செய்துகொண்டே நித்திரையில்லாமல இராக்காலத்தைக் கழித்து அருணோதயத்துக்கு முன்னே திருத்துழாய் கலந்த பரிசுத்தநீரிலே ஸ்நானஞ்செய்து எதாசாஸ்திரமாகப் பிதுர்தேவதைகளுக்குஞ்

---

* கலா என்பது ஒருநாழிகையின் சிறியபங்கு.

தர்ப்பணத்தைசெய்து சர்வேஸ்வராகிய ஹரியையும் பெரிய பிராட்டியாரையும் பத்மமாலையைத் தரித்துக் கோமளமாகிய திருத்துழாய்த்தளங்களாலும புஷ்பங்களாலும் தூபதீபாதிகளாலும் ஆராதிக்கக்கடவன் அந்த ஆராதனத்திலே தீபங்கள் நூற்றெட்டாயிருக்கவேண்டும் பசுவின் நெய்யும் நல்ல சர்க்கரையுஞ்சேர்ந்த பாயசத்தையும் நானாவித கனிவர்க்கங்களும் கர்ப்பூரம், இலவங்கம், சாபத்திரி, சாதிக்காய்முதலிய வாசினைத்திரவியங்களோடு அடைக்காயமுதஞ் சமர்ப்பித்து நமஸ்காரஞ்செய்து சமிதையினால் அக்கினியை வளர்த்திப் புருஷசூக்தத்தினாலே பசுவினெய்யையும் சூக்தத்தினாலே பாயாசத்தையும நூற்றெட்டு ஓமம்பண்ணிமுடித்துச் சூரியோதயத்துக்கு முன்னேதானே தீர்த்தமும் துளசியுஞ் சுவிகரித்து வைஷ்ணவாளுக்குத் ததியாராதனஞ்செய்து பின்னே வாக்குநியமத்தையுடையவனாய்த் தானும் புசித்து அன்றையப்பகற்பொழுதை நித்திரையில்லாமலே இதிகாசபுராணங்களால் பகவத் குணனுபவஞ்செய்து போக்கி அன்றிராத்திரியுந் தசமியிற்செய்தாற்போலவே ஸ்திரீ சங்கமத்தைவிட்டுத் தனியேசுசியாய் தரையின்மீதுபடுத்து நித்திரிக்கக்கடவன் வாராய் பார்வதி, துவாதசியில் ஸ்ரீயப்பதியை இப்படி ஆராதிக்கின்ற புருஷசிரேஷ்டனுக்குப் பெரிய பிராட்டியாரோடு சர்வேஸ்வரானவர் சீக்கிரத்தில் பிரசன்னராய் சர்வாபீஷ்டங்களையுங் கொடுப்பாரென்று ஸ்ரீருத்திர பகவான் சொல்லியருளினரென்று சூதபுராணிகர் நைமிசாரண்ய வாசிகளாகிய சௌநகாதி முனிவர்களுக்கு உபதேசித்தபடியே வசிஷ்டமகாமுனிவர் சூரியவமிச ராஜனாகிய திலீபச்சக்கரவர்த்திக்குச் சொல்லியருளினர்.

அநுஷ்டிப்பு முற்றிற்று.

---

## ருக்குமாங்கத ஏகாதசிசரித்திரம்.

---

பூபால சிரேஷ்டனாகிய மருத்தமகாராசனனவர் முனிபுங்கவராகிய வசிஷ்டமகாரிஷியை பிரணாமஞ்செய்து வேத இதிகாசபுராணங்

ஈஉ:லே சொல்லப்பட்ட உபவாஸவிரத திநங்களுக்குள்ளே சிறந்த ஹரிதினமாகிய ஏகாதசி உபவாசத்தை அநுஷ்டித்து எந்தப்புருஷன் விதிசிவாதிகளுக்கும் மநோவாக்கால் அளவிட்டுச் சொல்லப்படாத பரமபதத்தை யடைகிறானோ அந்த உத்தமபுருஷனையும் அவன் ஹரிதினத்தில் உபவாசமிருந்து அநுஷ்டித்த கிரமத்தையும் அடியேனுக்கு விவரமாய்த் தெரிவித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர் தம்மைப் பிரார்த்திக்கின்ற அந்த மருத்தமகாராஜனைப் பார்த்து வசிஷ்ட மகாமுனிவர் சொல்லுகிறார் வாராய் பாகவதோத்தமனே பூர்வத்தில் விதர்ப்பதேச ராஜனாகிய ருக்குமாங்கதராசன் சர்ப்பன்னதேசத்து மகுடவர்த்தனர்களும் தனக்குக் கப்பங்கட்டும்படி மனுமுறை தவறாமல் செங்கோல்செலுத்தி இந்தப்பூமண்டலத்தை ஆளுகைசெய்துகொண்டு பகவானுடைய திவ்வியசரணாரவிந்தங்களில் பிரீதியுடையவனாயிருக்கின்றகாலத்தில் அந்தராஜசிரேஷ்டனுடைய நூறுதேவிமார்களில் நற்குண நற்செய்கைகளாலமைந்த பதிவிரதாசிரோன்மணியாகிய சந்தியாவளி என்பவள் ஸ்ரீபகவானுடைய சங்கற்பத்தினால் ஒரு திவ்விய புத்திரரத்தினத்தைப் பெற்றனள். அந்தப் புத்திரனுக்குத் தகுந்தகாலங்களில் சௌளம் உபநயனாதிகளும் தர்மாங்கதனென்று நாமகரணஞ்செய்து அவனுக்குச் சதுர்வேதங்களையும் இதிகாசங்களை அஷ்டாதச புராணங்களையும் ஆறுசாஸ்திரங்களையும் தனுர்வித்தையையும் கற்பித்துச் சுகஜீவியாய் வாழ்ந்துகொண்டிருந்தனன்.

இவனிப்படியிருக்க, ஒருமகாரிஷியானவர் தாம் தபசுசெய்வதற்குத் தக்கஇடத்தைத் தேடிக்கொண்டு வருமளவில் ருக்குமாங்கதமகாராசன் தனனுடைய பட்டபுஸ்திரீகள் நாலுவித சுகந்தபரிமள புஷ்பங்களைப்பறித்து அலங்காரஞ்செய்து கொள்வதினிமித்தம் அமைத்திருக்கின்ற உத்தியானவனத்தைக்கண்டு அதில் சந்தனம், அகில், சண்பகம், கோங்கு, காயாகுங்குமம், பாதிரி, குருக்கத்தி, சுரபுன்னை, நாரத்தை, செருந்தி, கமுகு, கூந்தற்கமுகு, பலா, தேமா, அரசுவாழை, அசோகு, மகிழமுதலிய விருட்சங்களும் துளசி, இருவேலி, இருவாட்சி, மல்லிகை, முல்லை, அலரி, மருகுகொழுந்துமுதலிய புஷ்பச்செடிகளும் பலவிதபூங்கொடிகளும் அடர்ந்து இருண்டு குளிர்ந்த நிழலைச்செய்துகொண்டிருப்பதும் தாமரை, அல்லி, குவளைமலர்ந்திருக்கிறதடா

ங்களையும் பார்த்து அதிசயித்து இதுவே நாம் தவஞ்செய்வதற்கு யோக்
கியமான விடமென்று மகிழ்ந்து உள்ளே பிரவேசித்து ஓரிடத்தில் பர்
ணசாலைசெய்து தபசில் இருந்துவிட்டனர் அந்தவனத்தைக் காப்பவ
ர்களும் இந்த மகாரிஷியானவர் வனத்துக்குள்ளே பிரவேசிப்பதைக்
குறித்து யாதொரு தடையுஞ் செய்யாமல் அதிபயபக்தியோடு அவரு
க்கு உபசாரஞ் செய்துகொண்டு வந்தார்கள் வாராய் மார்த்தாண்ட கு
லேசனாகிய மருத்துமகாராசனே ருக்மாங்கதமகாராசனுடைய சிங்கா
ரவனத்தில் இந்தமகாரிஷியானவர் தவம்பண்ணிக் கொண்டிருக்குங்
காலத்திலே பிரமருத்திராதி சமஸ்ததேவர்களும் தங்கள் தங்கள் இஷ்
டசித்தி நிறைவேறும்படி ஸ்ரீ அரியை ஆராதிக்கின்ற திருவாராதனைக்
கு வேண்டிய நானாவித திவ்விய பரிமள புஷ்பங்களைப் பூலோகத்தில்
வந்து அங்கங்குள்ள புண்ணிய நந்தவனங்களில் பறித்துக் கொண்டு
போகாநின்ற சிலதேவ சாஸ்திரிகள் ஒருநாள் இந்தச் சிங்கார வனத்
தைக்கண்டு இதில் ஸ்ரீசர்வேஸ்வரராகிய ஸ்ரீபரந்தாமனை அர்ச்சிப்ப
தற்கு யோக்கியமான புஷ்பங்கள் போதுமான மட்டும் இருக்கின்றப
டியால் நாம் வேறிடங்களைத் தேடிச்செல்வானேன் என்று தங்களுக்கு
ள்ளே பேசிக்கொண்டு ஸ்ரீ அரிநாம சங்கீர்த்தனஞ் செய்து பூத்தி
ருக்கின்ற மலர்களைத் தினந்தோறும் வந்து வேண்டிய மட்டும் எடுத்
துக் கொண்டு போவார்கள் இவ்வாறு அந்த சாஸ்திரிகள் எடுத்துக்
கொண்டு போவதினாலே நாங்கள் அலங்காரஞ்செய்து கொள்வதற்கு
ப் போதுமான மலர்கள் அரண்மனைக்குக் கொள்களாய் வருகிறதில்
லையென்று ருக்குமாங்கத மகாராஜனுடைய பட்டஸ்திரீயாகிய சந்தி
யாவளிதேவி முதலிய நூறுபேர்களும் தங்கள் இஷ்டநாயகனுக்குத்
தெரிவித்தார்கள் அந்தராஜேந்திரனாகிய ருக்குமாங்கத மகாராஜன்
உத்தியான வனத்தைக் காக்கின்றவர்களையும் போஷிக்கின்றவர்களை
யும் அழைத்துச் சிலநாள்களாகப் புஷ்பங்கள் குறைவதற்குக் காரண
ம் என்னவென்று கேட்க அதற்கு அந்த வேலையாளிகள் அஞ்சலி பந்த
ஞ் செய்துகொண்டு ராஜமார்த்தாண்டனே பூமண்டலாதிபனே தே
வரீருடைய கட்டளையின்படி நாங்கள் உத்தியான வனத்தைக் காவல்
செய்வதிலும் போஷிப்பதிலும் யாதொரு குறைவுமில்லை தினமானம்
சாயங்காலத்தில் எவ்வளவு நாளரும்புகளைக் காண்கிறோமோ அவ்வள
வு மலர்களை மறுநாள் உதயத்தில் காண்கிறதில்லை வேறொருவருடைய
பாதச்சுவடுகளையும் அவ்விடத்தில் காணோம் ஆயினும் இனி இரண்டொ
ரு நாள்களுக்குள்ளே அந்தச்சோரர்களைப் பிடித்துக் கொண்டுவந்து
தேவரீருடைய சமுகத்தில் விடுகிறோமென்று மகாராஜனிடத்திலே

வு பெற்றுக்கொண்டுவந்து அந்தவனத்தில் இரவும்பகலுமாக நித்திரை யில்லாமல் காத்திருந்தும தேவதாஸ்திரிகள் வருவதும் புஷ்பங்களை எடுத்துக்கொண்டு போவதும் தங்கள் கண்களுக்குத் தோற்றுமையால் இனிநம்மாலாவதென்னநாம் அதிசாக்கிரதையாகக் காத்திருக்க இந்தநாள்களிலும் வழக்கப்படிப் புஷ்பக்குறைகின்றதே இதற்குநாமென்ன செய்யப் போகிறோமென்று அந்தவனத்து ஏவலாளிகள் தங்களுக்குள்ளே அதிகவிசாரத்தை யுடையவர்களா யிருக்கும்போது அவர்களில் ஒருவன் சொல்லுகிறான்.

வாருங்கோள் சகோதரர்களே தபோநிஷ்டைகளை யனுஷ்டிக்கிறவர்கள்கந்தமூலம் சருகுஜலம் வாயுமுதலானதுகளைப் பட்சிப்பார்களென்று பெரியோர்கள் சொலலக் கேள்விப்பட்டிருக்கிறோமன்றோ ஆகையால் இந்தவனத்தில் தவத்தைப் பூண்டிருக்கும் மகாரிஷியே தமக்குப்பட்சணையாகப் பூக்களைப்பறித்துப்புசிக்கிறதாக எனக்குத்தோன்றுகிறதென்று சொன்னான் மற்றொருவன்சொல்லுகிறான் ஆம் அதற்குச்சந்தேகமில்லை அந்நியர்உள்ளே பிரவேசிக்கவும் நாம்கண்டதில்லை அவர்களுடைய காலடிகளையும் பூமியிற்காணோம் ஆகலால் நீசொன்னதே நல்ல அபிப்பிராயமென்று அவாகளெல்லோரும பேசிக்கொண்டு அந்த மகாரிஷியினுடைய சமீபத்திலேபோய் ஐயாஉம்மை எங்களுடைய அரசன் அழைத்து வரச் சொன்னாரென்று தண்டகாரமாகப்பிரணாமஞ்செய்து இனியவசனங்களைச்சொல்லி ருக்குமாங்கதமகாராஜனுக்கு முன்னே அழைத்துக்கொண்டுபோய் விட்டார்கள் அந்தச்சற்குணவிவேக சிலனாகியமகாராசன்தலையில்பவளக்கொடிகள்போன்ற சடாமகுடம் ஆகாரநித்திராதிகளைஒழித்துஇளைத்த மெலிந்திருக்கிற மேனியில் பன்னிரண்டு திருமட்குறியும் கையில் செபமாலையும் உடையவராய் ஸ்ரீராமதாரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு ஸ்ரீசங்கரபகவானைப்போல் விளங்குகின்ற மகாரிஷியைக் கண்டமாத்திரத்தில் சிங்காதனத்தை விட்டிறங்கிச் சாஷ்டாங்கமாகத் தண்டன்சமர்ப்பித்துவாரீரென்னை ஆளவந்த அருந்தெய்வமே என்றுசொல்லி அர்க்கியபாத்தியங்களைச் செய்து ஒருதிவ்ய ரத்தின கசிதமான ஆசனத்தில் எழுந்தருளச்செய்து அஞ்சலிபந்தஞ்செய்துக்கொண்டு நின்றான்.

அப்போது முனிசிரேஷ்டரானவர் அந்த மகாராஜனைப் பார்த்து வாராய் நரேந்திரனே நீர்என்னை அழைத்துவரச் சொன்ன காரியம் யாதென்று வினவினார் வினவவே மகாராஜன் நாமொன்று மறியோமே இதென்ன விபரீத மென்று திடுக்கிட்டுப் பயந்து

அந்த வனப் பரிசாரகர்களைப்பார்த்தனன் அதறிந்து எங்களையனே
உம்முடைய உத்தியானவனத்தில் வேறொருவர் பிரவேசிக்கநாங்கள்க
ண்டதில்லை இந்தமகாரிஷி ஒருவர் மாத்திரந்தான் இரண்டொருமாத
மாக அந்தவனத்தில் வசிக்கின்றார் ஆதலால் இவர்மேல் எங்களுக்குச்
சந்தேகந் தோன்றியபடியால் அழைத்துக்கொண்டு வந்தோமென்றுந
டுங்கிச்சொன்னார்கள சொன்னமாத்திரத்தில கண்சிவந்து அதிககோப
ங்கொண்டு அவர்களைப்பார்த்து அதட்டி மூடமதிகளே உலக ஆசை
யைவெறுத்துத் தபவேஷம் பூண்டு அதிக பரிசுத்தராய் விளங்குகின்
றமுனிவர்களைபோ அல்ப வஸ்துவாகிய புஷ்பங்களை அபகரிப்பவர்க
ளெனச் சந்தேகிக்கிறதென்று சொல்லி அந்தமுனி புங்கவருடைய பா
தங்களில்விழுந்துவிழுந்துசேவித்து ஹரியினுடையசரணாரவிந்தியா
னநிஷ்டரே அடியேனையும் நம்முடையவிஷயத்தில் அபசாரப்பட்ட
இந்தமூடஜனங்களையும் அருள்கூர்ந்து ரக்ஷிக்கக்கடவீரென்று பலகா
ல்விழுந்துசேவிக்கின்றசுகுணசீலனாகிய ருக்குமாங்கதனைப்பார்த்துவா
ராய் பூபாலோத்தமனே உம்முடைய சிங்கார வனத்தில் புஷ்பங்கள்
குறைந்துபோவதற்குக்காரணத்தை நான்வெளியிடுகிறேன் கேளுமெ
ன்று சொல்லுகின்றார்

தினந்தோறும் ஸ்ரீபகவானைத் தேவர்கள் அர்ச்சிப்பதற்குச் சூரி
யோதயமாகச் சாமப்பொழு திருப்பதற்கு முன்னே உம்முடையநந்த
வனத்தில் சிலதேவதாஸ்திரீகள்வந்துவேண்டியமலர்களையெடுத்துக்கொ
ண்டு போகிறபடியால் புஷ்பங்குறைகின்றது அவர்களைக்கையுமெய்யு
மா யறியவேண்டுமானால் அந்தவனத்தில் சிலவிடங்களில்கொம்மட்
டிவிதைகளை விதைத்துப்பயிர்செய்தால அந்தஅசுத்தமாகிய கொடிக
ள் அந்தஅப்சரஸ்திரீகளுடைய பாதங்களிலாவது பட்டாற்போதும்இ
தனால் அசுத்தமடைந்து ககனமார்க்கத்தில் போகமாட்டாதவர்களாய்
நின்றுவிடுவார்கள் அதுசமையத்திலே அவர்களைப்பார்க்கக்கூடுமென்
று அவர்களைக்காணக்கூடிய உபாயத்தையும் எடுத்துக்காட்டி அந்தச்
சபையிலிருந்த ராசர்களும் பிராமணோத்தமர்களும் மற்றவர்களும் வ
ணங்கும்படிஎழுந்திருந்து ருக்குமாங்கதமகாராஜனுக்கு ஆசிர்வசனங்க
ளைச்சொல்லிதம்முடைய ஆச்சிரமத்திற்குப்போயினர்.

உடனே அந்தமகாரிஷியானவர்சொல்லி யருளியபடியேருக்குமா
ங்கதமகாராஜன் வனத்துத்தொழிலாளிகளுக்குக் கட்டளையிட அவர்க
ள் அப்படியே அந்தவனப்புதேசத்தில் சிலசில விடங்களில் கொம்ம

ட்டிவிதைகளை விதைத்தனர்கள் அவைகளங்குரப் பயிராகிவனமெங்கு முள்ளமரங்களிலும் பூஞ்செடிகளிலும் பூங்கொடிகளிலும படர்ந்திருந்தபடியால் வழக்கப்படியே வந்து புஷ்பங்களைப் பறிக்கின்ற அந்தத் தேவதாஸ்திரீகளில் ஒருதெய்வப்பெண்ணினுடைய பாதங்களில் அந்தக்கொடிபட்டு அசத்தையாய் விட்டனள்மற்ற அப்சரஸ்திரீகளில் அரிநாமசங்கீர்த்தனஞ் செய்துதிவ்யபரிமளபுஷ்பங்களை யெடுத்துக்கொண்டுபோகாமிருக்க அவர்களைக்கூவி நொம்மட்டிகொடிகாலில தீண்டியபடியால் நான் அசத்தையாய்விட்டேனாகையால் இப்போது நான்வரக்கூடாதுநீங்கள்யாவரும் ஸ்ரீஅரிபூசைவேளை தவறாமல் போய்வாருங்களென்று சொல்லிவிடாது விட்டனள் அங்கிருந்த இச்செய்திகளைப் பார்த்திருந்த மகாரிஷியானவர் அந்தவனத்துத் தொழிலாளரொருவனையழைத்து ருக்குமாங்கதமகாராஜனை சீக்கிரமாய் நம்மிடத்தில்வரும்படிச் சொல்லியனுப்பினர் அவனப்படியரசனுக்குத் தெரிவித்தமாத்திரத்தில் மகாராஜனும் புறப்பட்டுச் சீக்கிரத்திலே அந்தமுனிபுங்கவருடையஆச்சிரமத்திற்குவந்து தண்டன்சமர்ப்பிக்கவே அந்தமகாராசனை ஏகாந்தமாய் அழைத்துக்கொண்டுபோய் அசத்தையாய்நின்றதெய்வப்பெண்ணைக்காட்டினர் அந்தமகாராஜன் அசத்தையாகிய தேவதாஸ்திரீசமீபத்திலேபோய்ச் சாஷ்டாங்கமாகப்பிரணாமஞ்செய்து நின்றனன் அந்தத்தெய்வப்பெண் மகாராசனைப்பார்த்துச் சொல்லுகின்றாள்.

வாராய் ஸ்ரீபகவத் கைங்கரிய துரந்தர சீலனே உன்னுடைய புண்ணிய வனத்தில் நானும் சில தேவஸ்திரீகளும் சிலநாளாய்வந்து திவ்விய புஷ்பங்களை யெடுத்துக்கொண்டு அரியைத் திருவாராதனஞ் செய்கின்ற விதி செய்தி தேவர்களுக்குக் கொடுப்போம் இன்றையத்தினம் உன்னுடைய வனத்தில் படர்ந்திருக்கின்ற நொம்மட்டிக்கொடி என்காலிலபட்டுத் தீட்டப்பட்டேன் ஆகையால்நான் மாத்திரம் நின்று விட்டேன் மற்றத்தேவதாஸ்திரீகள் போய்விட்டார்கள் தேவர்களாகியநாங்கள் பூலோகத்தில் பாமரர்களுடையகண்களுக்கல்லாமல் மற்றச்சாதாரணஜனங்களுடைய நேத்திரங்களுக்குக்காணப்படமாட்டோம உன்னுடைய நந்தவனத்துப் புஷ்பங்கள் ஸ்ரீ அரிபூசைக்கு உபயோகமாகின்ற மகாபுண்ணிய வசத்தினாலாக்கும் உன்னுடையதிருஷ்டிக்கு நானதோன்றினேன வாராய்சந்திர குலோத்தமனே நாங்கள் பூக்கொய்யும்போது அரிநாம சங்கீர்த்தனஞ் செய்கிற தவறு

டனேப்படியே போன சுந்தியானவள் பகவானுடைய கிருபா கடாட்சத்தாலேபெற்ற ஏகாதசிவிரதபலனை அப்சரஸ்திரிக்குத் தாரைவார்த்துக் கத்தஞ்செய்தனள் தத்தஞ்செய்த மாத்திரத்தில அந்தத்தேவதாஸ்திரி அநிபத்தி கத்தத்தைஅடைந்துககனமார்க்கத்திலேபோகின்றவள் ருக்குமாங்கதமகாராசனைப்பார்த்து வாராய்மகோபகாரியாகிய சந்திரவமிச நாபாலனே ஏகாதசியுபவாச வரலாற்றைச்சொல்லுகிறேன்கேட்கக்கடவாய்பூருவத்திலே துருவாச மகாரிஷியானவர் தம்முடையவிஷயத்தில்அபசாரபட்ட இந்திரபகவானுக்கிட்டசாபத்தினால்பிரமருத்திரேந்திராதி சமஸ்த பிராணிகளுக்குந்தாயாகிய மகாலட்சுமி அந்தர்த்தானமாயினள் அதனால் சதுர்முகன் சிவன்முதலாகிய ஆத்தும கோடிகள் அதிதுக்கத்தையுமநுபவித்தயாதொருசெயலுமில்லாமல் பகவானுடைய அருளைப்பெற்றுமகாலட்சுமியினுடையதிவ்வியாவதாரத்தைக்குறித்துப் பிரமருத்திராதிதேவர்களும் தானவர்களும் ஆகாரநித்திராதிகளை ஒழித்துயேகாதசிமுழுமையும் விரதமிருந்து மந்தரமலையால் திருப்பாற்கடலைக் கடையா நிற்கையில்மறுநாள் துவாதசி சூரியோதயத்துக்குமுன் மகாலட்சுமிதிருவவதரித்தனள் அந்தவகிலலோகேஸ்வரியை பகவானுக்குத் திருமணஞ்செய்து பூமியில் விழுந்து சேவித்துத்துதித்துபாதாரவிந்தகங்கோதகத்தையுந்தாங்கதிருவடியிலேயர்ச்சித்ததிருத்துழாவையும்உண்டு பின்புசகலதேவர்களும்அமிர்தபானம் பண்ணினார்கள் பகவானுடையகட்டளையினால்அதுமுதல்பிரமருத்திராதிகளும்பூசுரர்களும்இந்தவிரதத்தை யநுஷ்டிக்கிறார்கள் இந்தவுபவாசவிரதமிருப்பவர்கள் அரியினுடையகட்டளையைமீறினவர்களாகிறார்கள் அவர்கள்நரகமடைவதற்குச் சந்தேகமில்லை.

ஆகையால் சந்திரகுல புத்திரனே தசமியில் தீர்த்தமாடிப் பன்னிரண்டு ஊர்த்துவபுண்டாந்தரித்து ஒருவேளை அன்னத்தைப் புசித்துத் தொடக்கஞ்செய்து ஏகாதசியிலும் தீர்த்தமாடித் திருமண்தரித்துத் திருத்துழாயுதகமுண்டு ஆகாரநித்திராதிகளை ஒழித்து அரியினுடைய குணானுபவஞ்செய்து மறுநாள் துவாதசியில் சூரியோதயத்துக்கு முன் தீர்த்தமாடிப் பன்னிரண்டு திருமட்குறிகளையும் அணிந்துகொண்டு துளசியாலும் திவ்வியபரிமளமுள்ளபுஷ்பங்களாலும் அரியையாராதித்துத் துளசிதீர்த்த முண்டு ஸ்ரீ பாகவதோத்தமராகிய ஒரு அதிதியையழைத்துவந்து அவரோடு திவ்வியான்னத்தைப் புசிக்கக்கடவாய் ஸ்ரீபரந்தாமனுக்கு ஆராதித்தசேஷமாகிய சந்தபுஷ்பங்களைத் தரித்து ஸ்ரீ அரிநாமசங்கீர்த்தனஞ்செய்து அவருடைய ஆலயங்களிலாவது காலக்ஷேபஞ் செய்

களிலாவது போயிருந்து நித்திரை யில்லாமலே அன்றுபகற் பொழுதையும்போக்கி இராத்திரிக்கு முணவில்லாமலேஇருந்துஇவ்வாறுவிரதராஜமாகிய ஏகாதசிவிரதத்தை யனுஷ்டிக்கக் கடவாய் இதுதான் என்னால் உனக்குச்செய்யத்தக்க பிரதியுபகார மென்று சொல்லிய தெய்வப்பெண் ககனமார்க்கத்திலே போய்விட்டனள் பிற்பாடு ருக்குமாங்கதமகாராஜன் அந்தவனத்திலிருந்து கொம்மட்டிக் கொடிகளொன்றுமில்லாமல் வெட்டிப்பரிந் தெரிந்துவிட்டு இனி இதில் அரண்மனைப் புஷ்பங்க ளெடுக்கவேண்டியதில்லை இந்தப் பூஞ்சோலை அப்சர ஸ்திரிகள் புட்பம்பரிப்பதற்கே உபயோகமாகக் கடவது வேறொரு நந்தவனத்தைக் காப்பவர்களுக்கு கண்டிப்பாய் உததிரவுசெய்து சபாமண்டபத்தையடைந்து இச்செய்திகளையெல்லாந் தன்னுடைய மந்திரிமார்களுக்கும் அச்சபையின்கணிருந்த கற்றுவல்ல பெரியோர்களுக்கும் சாங்கோபாங்கமாகத் தெரிவித்து அந்தத் தெய்வப்பெண் தன்னை ஏகாதசிவிரதத்தை யனுஷ்டிக்கும் படிச் சொன்னதையுஞ் சொல்லினன் அதுகேட்டமந்திரி முதலானவர்களும் சாஸ்திரவிசாரணை விற்பன்னர்களும் அதிக ஆனந்தபரவசர்களாய்ச் சொல்லுகிறார்கள்.

வாராய் ருக்குமாங்கதமகாராசனே பகவானுடைய நீரேருகஜமயமான கடாக்ஷத்தினால் இந்தமகாவிரதம் தெய்வப்பெண்ணால உமக்கு உபதேசிக்கப்பட்டதோ அந்த ஏகாதசி மகாவிரத்தை யனுஷ்டிக்கின்றவர்கள் ஜாதியில சண்டாளர்களாயினும் அந்த உத்தம புருஷர்கள்இம்மையில் தங்களிஷ்ட காமியங்களை யடைந்து மறுமையில் ஸ்ரீவேதபுருஷனுக்கும் அதிதி வாதிகளுக்கும் மனோவாக்குகளால் நினைப்பதற்குஞ் சொல்வதற்குந் துல்லபமாகிய நிரதிசயா நந்த பரமபதத்தையடைவார்கள் இது வேத சாஸ்திரங்களால் கூறப்பட்ட பரமார்த்தமாக்கும் ஆகையால் இவ்விரத சிரேஷ்டத்தை ஆவசியமாய் நீர் அனுஷ்டிக்க வேண்டுமென்று அங்குள்ளவேத இதிகாச புராணாதிகளை நன்றாய்ப்பரிசிலனஞ் செய்திருக்கின்ற பெரியோர்கள் யாவருஞ் சொன்னார்கள் அப்படிச் சொன்ன பெரியோர்களைப் பார்த்து ருக்குமாங்கதமகாராஜன் சொல்லுகிறான் வாருங்கோள் வைதிக நிஷ்டானுபவ மகானுபாவர்களே தன்குடையின் கீழிருக்குங் குடிகளை வர்ணாச்சிரமத்தவரவெட்டாமல் அவரவர்களுக் குரிய ஜாதிகர்மங்களை யனுஷ்டிக்கச்செய்து சன்மார்க்கத்திலே நடத்துவ தன்றோ ராசதர்மம் ஆகையால் என ஆளுகையின் கீழிருக்கும் சகல தேசத்தார்களையும் இந்தவிரதத்தை அனுஷ்டிக்கச் செய்யவேண்டு மென்று எனக்கு இஷ்டமிருக்கிறதென்றுசொல்ல அங்குள்ள யாவரும் ருக்குமாங்கத மகாராஜனுடைய விவேகதுணத்தையும் தன்குடிகளிடத்தில்வைத்திருக்கும்

லோகாருண்ணியத்தையுங் குறித்து அவனைப் பலவாறாக மெச்சிக் கொண்டாடி அப்படிச்செய்வது உத்தமமென்று ஒத்துக் கொண்டார்கள் உடனே தனக்குக் கப்பனம் கட்டிக் கொண்டு வருகின்ற சம்பன்னதேசத்து ராஜாக்களும் அவர்களுடைய குடிகளும் பூர்வபட்ச அமரபட்சங்களில் வருகின்ற ஒவ்வொரு ஏகாதசி மகாவிரதத்தையும் அனுஷ்டிக்கும்படி அக்கராஜாக்களுக்குத் திருமுக மனுப்பிவித்துத் தன்தேச மெங்குமுள்ள குடிகளெல்லாரும் இவ் விரதத்தை அனுஷ்டிக்கக் கட்டளையிடும்படித் தன்னுடைய மந்திரிகளாகிய சுமந்திரனுக்கு உத்திரவு செய்தனன் அந்தச் சுமந்திரன் யானையேறும் பெரும் பறையனை அழைத்து எட்டுவயதுக்கு மேற்பட்ட சிறுவர்களும் புருஷர்களும் இந்த ஏகாதசிவிரதத்தை அனுஷ்டிக்கும்படி நகரமெங்கும் பறைசாற்றக் கட்டளையிட்டனன் அந்த வள்ளுவன் யானையின்மேற் போய் நகரமெங்குந் திரிந்து பறைகொட்டி ஜனங்களை கேளுங்கோள் எட்டுவயதுக்கு மேற்பட்ட புருஷர்களும் ஸ்திரீகளுமாக சாதுர்வர்ணத்தார்களும் ஒவ்வொரு பட்சத்திலும் வருகின்ற தசமியில் பரிசுத்தமோடிப் பவித்திரவிரலில் தர்ப்பைப் புல்லுடன் தரித்துக் கொடைக்கஞ்செய்து ஏகாதசியில் அவ்வாறேசீராடித் திருமணிட்டுக்கொண்டு நித்தியபுண்ணியமுண்டு அன்றுமுழுதுமையும் ஆகாரநித்திராதிகளையொழித்து ஸ்ரீபகவத் குணநுபவஞ் செய்து பொழுது போக்கித் துவாதசாக்ஷரங்களை யுச்சரித்துத் திருமண்காப்புத் தரித்துக் கந்தபுஷ்ப தூபதீபங்களால் அரியை ஆராதித்து சாறுவிதமாக பலவர்க்காதிகளை நிவேதனஞ்செய்து திருத்துழாய்த் தீர்த்தத்தை சுவீகரித்து பரந்தாமருடைய உபாசகரான விப்ரர்களிலேயே பக்திசிரத்தையுள்ள பாகவதராகிய ஒருவதிதியை உபசரித்து அவரோடு கூட அன்னத்தைப்புசித்து ஸ்ரீபகவத் சேஷமாகிய கந்தபுஷ்பாதிகளைத் தரித்துக்கொண்டு அன்றுபகல் ஏகாதசி இராப்பொழுது விருந்தாப்போலவே நித்திரையில்லாமல் ஸ்ரீஅரியி னுடையகோவில்களிலும் அவருடைய பக்தர்களியான குணநுபவங்களைச் செய்யாநின்ற இடங்களிலும் வாசமாயிருக்கக் கடவீர்கள் வாருங் கோள் பிரஜனங்களே இந் பூமண்டலேஸ்வரராகிய ருக்மாங்கத மஹாராஜருடைய கட்டளை யென்றுசொல்லிப் பறைசாற்றினன் அதை கேட்டு விருத்தர்களும் புருஷர்களும அவரவர்களுடைய ஸ்திரீகளும பாலர்களும ஆனந்தபரவசர்களாய்த் தங்களுடைய மகாராஜனை காருணிகனைப் புகழ்ந்து கொண்டாடி அதிபக்தி சிரத்தை யோடு விரதா சார்யமாகிய ஏகாதசியையும் அதனங்கமாகிய தசமி துவாதசி களையும் சாஸ்திர விதிப்படி விரத மனுஷ்டித்தனர்கள் ருக்மாங்கத மகா

ராஜனும் அவனுடைய அறுதேவிமார்களும் புத்திரனுகிய தர்மாங்க தனும் மந்திரிசாமந்தர்களும் கன் அரண்மனையிலுள்ள சமஸ்தபரிகா ரர்களும் தானம் தர்மம் அர்த்தம் காமம் மோட்சமென்னும் சதுர்வி தபுருஷார்த்தங்களும் சாதனமாகிய இந்தவிரதத்தை அநுஷ்டித்துக் கொண்டு வந்தார்கள் இப்படி ஒவ்வொரு ஏகாதசிக்கும் முன்னே நவ மிதிதியிலே ருக்குமாங்கதமகாராஜனுடைய கட்டளைபால் நாடுநகரங் களெங்கும் பறைசாற்றி வள்ளுவன் தெரிவித்துக்கொண்டு வருவான்.



வசிஷ்டர்வாக்கியம்,

வாராய் சூரியவம்சோத்தரான நரபாலனுகிய மருத்தமகாராஜ னேயிப்படி ஏகாதசிவிரதமானது சகலதேயங்களிலும் வியாபித்திரு டவே அங்கே இந்தஹரிதினஉபவாசத்தைச் செய்கின்றயாவரும் இ ம்மையில் இஷ்டகாமியங்களைக் குறைவரஅடைந்து சுகசீவியாய் வெ குகாலம் புத்திரகளத்திராதி பந்துஜனங்களோடு வாழ்ந்திருந்து மறு மையில் நிரதிசயானந்த வைகுண்டத்தை யடைந்து கொண்டிருந்தார் கள் இந்தப்பிரகாரம் பூலோகமனுஷர்கள் பரமபதத்தை யடைந்துக் கொண்டுவருவதினலே பஞ்சபாதகங்கள் முதலான பாபங்களைச்செய் கின்றவர்கள் காலபாசத்தால்கட்டுண்டு யாதனுசரீரத்தைப்பெற்றுவித்

நியதுக்கத்தையே அநுபவித்துக்கொண்டுவசிக்கும் ரௌரவாதிநரகங்
கள்பாழாகித் தூதுகள்பாய்ந்தன இதுகண்டுயமதர்மராசன் அதிகஆச்
சரியத்தையடைந்து மகிஷவாகன ரோகணஞ்செய்து காலபாசமுங்
காலதண்டமுங்கையில் தாங்கிக்கொண்டு கயிலாசத்தையடைந்து தே
வர்கள்கின்னரர்கள் யட்சர்கள் தானவர்கள் ருஷிமுகங்கள்சேவித்துநி
ற்கக் கண்களின்பார்வை காசிமுனையிற்பாய ராமதாரக மந்திரத்தை
வாயில்உச்சரித்துக்கொண்டு கையில் செபமாலைவிளங்கும்படி ஆலமா
நிழலில் பரப்பிரமாநந்தத்தை யநுபவித்துக்கொண்டு சுகச்சினராஎழுந்
தருளியிருக்கும் லோகேஸ்வராரூப பரமசிவமூர்த்தியைக் கண்களிக்
ககண்டு தண்டாகாரமாகப் பிரணாமஞ்செய்து முறையிடுகின்றான்.

வாராய் சங்கரபகவானே முன்னால்திருப்பாற்கடலிற்பிறந்த காள
கூடவிஷத்தை பகவந்நாமங்களுள் நாமத்தியானத்தை யுச்சரித்துக்
கொண்டு கருடபகவானுடைய தியானத்தாலே பானஞ்செய்து எங்க
ளெல்லோரையும் ரட்சித்தயகாருபாவா எனக்கும் காலதூதர்களுக்
கும் யாதொருசெயலுமில்லாமல் நரகங்களும்பாழாகி என்னுடையநக
ரமும் விநாசத்தைபடைந்ததென்று முறையிடுகின்ற யமதர்மராசனை
ப்பார்த்து என்னால்செய்யத்தக்கதொன்றுமில்லை வாராய் எமனே யெ
ன்று அழைத்துக்கொண்டுபோய் மேருமலைசிகரத்தில்ரத்தினகசிதமாகி
யமண்டபத்தி லெழுந்தருளியிருக்கின்ற சதுர்முகனை வணங்கச்சேவித்
து யமலோகம் பாழடைந்திருக்குஞ் செய்தியை விண்ணப்பஞ்செய்த
னர் அதற்கந்தபிரமதேவன் புன்சிரிப்புக்கொண்டு வாராய்சங்கரனே
வாராய் யமதர்மராசனே பூர்வத்தில்மகாலட்சுமியின் திருவவதாரநிமி
த்தமாகப் பாற்கடலைக்கடைந்த காலமுதற்கொண்டு பகவானுடைய க
ட்டளையில் எல்லோரும் அநுஷ்டித்துக்கொண்டு வருகின்ற ஏகா
தசிவிரதத்தை ஒருதெய்வப்பெண்ணால் உபதேசிக்கப்பெற்றருக்குமா
ங்கதமகாராசனென்னுருவன் பூலோகத்திலே தன்குடையின் கீழிருக்கும்
சகலதேசத்து மனிதர்களையும் இவ்விரதத்தை நோற்கும்படிசெய்து
தானும்அநுஷ்டித்துக்கொண்டுவருகிறான் அதனாலாக்கும் யமபுரிக்கு
அநர்த்தமநேரிட்டது இதைக்குறித்து நம்மாலாகவேண்டியதென்ன
விருக்கின்றது ஆயினும் ஒருபாயத்தைச் செய்கிறேனென்று பிரமதே

வனானவன் ஊர்வசிமேனகை திலோர்த்தமைமுதலிய தேவதாஸ்திரீக ளும் காணும்படி அதிகரூபலாவண்ணியமுள்ள ஒருபெண்ணைச் சிருஷ்டித்தனன் அவள் நான் யாதுசெய்யத்தக்கதென்று வணங்கிக்கேட்கஅவளைப்பார்த்து பிரமன் சொல்லுகிறான்.



வாராய் சர்வலோகமோகனாங்கியே நீ பூமியிற்பிரவேசித்துமந்தர கிரிச்சாரலிற்போய் ஒருதிவ்ய சந்தனச்சோலையிற் ஏழுதுமரங்களிற்பூட்டிய பொன்னூஞ்சலின்மேலிருந்து விநோதஞ்செய்துகொண்டிரு அங்கவிநோதகானத்தைக்கேட்டு வேட்டையாடவந்த ருக்குமாங்கதமகாராசன் சோலைக்குள்ளேபிரவேசித்து உன்னைக்காண்பான் அவனை எவ்விதத்திலாவது உன்காமக்கடலில்மூழ்கச்செய்து அவன் உன்னை ஆலிங்கனாதிகளைச் செய்யவரும்போது அவனிடத்தில அரிசாட்சியாக எனக்கொருவரம்வேண்டுமென்று கேட்டுவாங்கிக்கொண்டுபின்னவனோடுகூடிக்கிரீடித்துச் சிலநாள் சென்றபின் ஏகாதசியில் அந்தவரத்துக்காக என்னை பிரீதிகவேண்டுமென்று அவனைப் பலாத்காரஞ்செய்துகூடி அவனவிரதத்தைபழித்துவிடு அவன் அதற்கு உடன்படாவிட்டால அவனுடைய புத்திரனாகிய தர்மாங்கதனுடைய தலையையாவது வெட்டித்தாச்சொல்லி வாங்கிக்கொள்ளென்று கட்டளையிட்டனுப்பிவந்த மலைச்சாரலில் ஒருதிவ்வியசந்தனச் சோலையையும்பொன்னூசலையும் சிருஷ்டித்தனன அவளதைக்கேட்டு அந்தச்சர்வசகன்மோகனாங்கியானவள் அப்படியே செய்கிறேனென்று பிரணாமஞ்செய்து செலவுபெற்றுக்கொண்டு மந்தரமலைச்சமீபத்தில சந்தனச்சோலையில்

கமுகுமரத்தில் பூட்டியிருக்கும் பொன்னூஞ்சலில் சோன்பிரதமை யைப்போல் உட்கார்ந்து ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனங்களைப்பாடிவீணை கானஞ்செய்து ருக்மாங்கத மகாராசனுடைய வரவை எதிர்பார்த் துக்கொண்டிருந்தாள். இவளிங்கே இப்படியிருக்க ருக்மாங்கதம காராசன் தன்னாட்டிலுள்ள பயிர்களையழித்து ஜனங்களை இம்சிக்கின் றதுஷ்டமிருகங்களை வேட்டையாடவேண்டுமென்று எண்ணங்கொண் டு தன்குமாரனாகிய தர்மாங்கதனைப்பார்த்து வாராய் புத்திரதீபமேகா



ட்டிற்போய் நான்வேட்டையாடிச் சில மகாருஷிகளையுங் கண்டு சே வித்துக்கொண்டுவருகிறேன் நீ வர்ணாச்சிரமந் தவறாமல் செங்கோல் செலுத்தி யாவரும் ஏகாதசி விரதந்தவறாமல் அநுஷ்டிக்கச்செய்து நீயும் அநுஷ்டித்துக்கொண் டிருவென்று இளவரசுபட்டங்கட்டி சந் நியாவளிமுதலிய நானாதேசியார்களிடத்திலும் பிரியவசனங்களைச் சொல்லிச் சிலநாட்களுக்குள்ளே வருகிறேனென்று செலவுபெற்றுக் கொண்டு வாயுவேகமனோவேகமாயோடுகிற துரகங்களைப்பூட்டிய ர

தாரோகணஞ்செய்து இரண்டுபக்கங்களில் சிலசேனைகளும் பின்பக்க த்தில் வளைதடிகுந்தம்முசலம் அம்புகள்கவண்கள் உண்டை வில் முதலி ய ஆயுதங்களையும் மிருகங்களையும் ஓடச்செய்யும் குறிஞ்சிப் பறையை யும் வலைகளையும் நாய்களையும்உடையவர்களாகிய வேட்டைக்காரர்களு ஞ் சூழ்ந்துவரச் சங்கபேரிமிருதங்காதி வாத்தியங்கள் கல்லென்று மு ழங்க வேதசாஸ்திர விற்பன்னர்களாகிய பிராமணர்கள் ஆசிர்வசன ங்களைச்சொல்லச் சுமங்கலிஸ்திரீகள் பல்லாண்டுகூற வேட்டைப் பிர யாணஞ்செய்துபுறப்பட்டு நகரகிராமங்களையும் நதிகளையும் குக்கிரா மங்களையுங்கடந்து ஆரணியத்திற்புகுந்து வாமதேவர் முதலிய சிலமக ாரிஷிகளுடைய ஆச்சிரமங்களிற்போய் அவர்களை வணங்கி அவர்க ளுடைய ஆசிர்வசனங்களைப்பெற்று அப்புறமசிறிது தூரங்கடந்துபோ



ய்ரதத்தைவிட் டிறங்கிக் கவசத்தைபணிந்து அம்புறாத்தூணியைப் பு றத்திற்கட்டிக்கையில் தனுசையேந்தி அரைப்பட்டிகையைதரித்து அதன மேல் உடைவாளை யிறுக்கிக்கொண்டு ருக்மாங்கத மகாராசன் தன்

சேனைகளுக்கும் வேட்டைக்காரர்களுக்கும் வேட்டையாட வுத்திரவு
செய்துவிட்டுத் தானும்வேட்டையாடத் தலைப்பட்டான்,

அப்போதுவேடர்களும் சேனைகளும் நான்குபுரங்களிலுங்கவிந்
துகொண்டு வாத்தியங்கள் முழங்கிமிருகங்களையும பட்சிகளையுமெழு
ப்பிவிட்டு அவற்றின்மேல்நாய்களை உசுப்பிவிட்டுத் தாங்கள்கவண் க
ல்லுண்டையிவற்றை யெறிந்தும் அம்புகளைப்பிரயோகித்தும் எதிர்மு
கமாக வலைகளைக்கட்டி மிருகங்களை ஓடவொட்டாமல்தடுத்து இம்சித்து
வர மகாராசனானவன் தனுசைவளைத்து நாணேற்றிப் புங்கானுபு
ங்கமாக அஸ்திரங்களைவருஷித்துசிங்கம்புலியானைகரடி காட்டெருமை
முள்ளம்பன்றி மான்முயல்பாம்பு முதலிய மிருகங்களையுங் கண்டபேரண்
டாதி பட்சி சமூகங்களையும் அதஞ்செய்துகொண்டு மந்தர கிரியின் ச
மீபமாய்ப்போகையில் விடாய்பட்டுத் தன்னுடைய நகரத்திலிருக்கும்
உத்தியான வனத்தைப்போலத் தோற்றுகின்ற ஒளிபூஞ் சோலையைக்
கண்டு அதனொரு புறத்திலே தானும் தன்சேனையுமாய்த் தங்கியிருந்
தான் அங்குத்தங்கியிருந்தகாலத்தில் சைவீகசுகந்த பரிமள வாடை
போல் தென்றல்வீசஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனத்தைப்பாடுகின்ற ஒருதி
வ்யகண்டத்தொனியையும் தானென்றுங்கேட்டறித வீணாகானத்தை
யுந்தான்கொண்டவிடாய்தணிய இருசெவியுங் குளிரக்கேட்டு அதிக
வாச்சரியத்தையடைந்து இந்த நிர்மானுஷமான ஆரணியத்தில் தேவ
நாயோக்கியமான கானஞ் செய்கின்றவர் யார் அவரைநான் அறிந்து
கொண்டு வருகிறேனென்று தன்சேனைகளைப்பார்த்துச் சொல்லித் த
னியாகச்சென்று பிரமருத்திரர்கள் தன்னைவஞ்சிக்கும்படி யனுப்பிய
தேவகன்னிகையை ரத்தினகசிதமாகிய பொன்னூஞ்சலின்மேலிருந்து
பாடக்கண்டுசற்றுநின்றான் அந்தத்தெய்வப்பெண் தனக்கெதிரேவில்
லம்புங் கையுமாகநிற்கின்ற இந்தமகாபுருஷனைக்கண்டு பிரம சங்கரர்க
ள் ருக்குமாங்கதனென்றொரு மகாராசன் வேட்டைநிமித்தமாக மந்தி
ரகிரிச்சாரலில்வருவான் அவனை உன்மையலிற் சிக்கச்செய்து முன்ன
தாக வொருவரம் பெற்றுக்கொண்டு அவனோடு கிரீடித்துப்பின் அந்
த ஒருவரத்தால் அவனுடைய ஏகாதசிவிரதத்தை யாவதுபங்கஞ்செ
ய்து அவனுடையபுத்திரனாகிய ருக்குமாங்கதனது தலையையாவதுபெ
ற்றுக்கொண்டு வாவென்று நமக்குச்சொல்லியிருந்தார்களே அந்தப்பு
ருஷ சிரேஷ்டனானவன் இவன்தானோ அல்லதுவேறொரு ராசபுத்திர
னோ இதையறிந்து கொளவோமென்று அந்தத்தெய்வப்பெண் சொல்
லுகின்றாள் வாராய்சத்தவீரசிகாமணியோர் உம்முடையபேர்யாது இ
வ்விடம்வந்ததற்குக் காரணமென்னவென்று கோகிலம்போலே மதுர

நயவசனங்களால் விசாரித்தனள் அதற்கு ருக்குமாங்கதன் சொல்லுகி
றான் வாராய்மங்கையர்க்கரசியே நான்சந்திராவதிதேசத்து அரசனாகிய வீ
ர் ருக்குமாங்கதன் துஷ்டமிருகங்களை வேட்டையாடுகிறதற்கிந்த இ
ந்தஆரணியத்திலே வந்தேனென்றுசொன்னான் அதுகேட்ட மாத்திர
த்தில் அந்தமோகனாங்கியானவள் நம்முடையஎண்ணம் இன்றைக்கு
த்தான் பலித்ததென்று குதூகலமாய் அந்தராசன்தன் ஆசைவலையிலகப்
படும்படி ஸ்ரீ அரிகீர்த்தனஞ்செய்து வீணைவாசித்துக்கொண்டே இ
ருண்டமேகம்போலக்கறுத்துத் தெய்வமணம்வீசுகின்ற திவ்வியமயிர்
ச்சாந்து பூசப்பட்டு நானாவிதசுகந்த புஷ்பங்களோடு முடிக்கப்பட்ட
அளகபாரமவிழ்ந்து முதுகிற்புரளவும் கைகளிலணிந்த நவரத்தின
கசிதமாகிய பொன்வளையல்கள்சுழலவும் மேலேதரித்த பீதாம்பரமா
யஉத்தரீயம் சோர்ந்துவிலகவும் முகமாகிய சந்திரனிடத்தில் அமிர்த
பானஞ்செய்யச் சொல்லுகின்றசேவலும் பேடையுமாகிய இரண்டு ச
கோர பட்சிகளைப்போல மார்பினிடத்தில் இரண்டு குஜங்கள் விளங்க
வும் காமக்குறிப்புத்தோன்றும்படி மந்தகாசஞ்செய்து மிகுந்தலச்சை
யோடு தலையைவளைத்து கடைக்கண்ணால் ராசனுடைய மார்பழகை
யுந்தோள்களினழகையும் பார்ப்பவன்போல வஞ்சமாகப் பார்த்துக்
கொண்டிருந்தவள் அந்தமோகனாங்கியானவள் தன்னிடத்திலே சிலச
ரமக்குறிகள்தோன்றும்படி வஞ்சகமாக நடக்கின்றதை யதார்த்தமெ
ன்றுநம்பி அரசனும் அவள்காமாங்கத்துக்குள்ளாகி அந்தக்கரணங்
களும் நிலைதடுமாறக்கைகளில் தாங்கியதனுசும் சோரவிழக்கண்க
ள் பொற்கிண்ணங்களுக்குச் சமானமாகிய இரண்டுகுஜங்களிலும் பதி
ந்துவிடச்சித்திரப்பிரதமையைப்போல அசைவற்றுநின்றுவிட்டான்.



இந்தப்பிரகாரம் புத்திபிரதமைபடைந்து மகாராசன் தன்னுடையமனதைத் திடப்படுத்திக்கொண்டு அவள் சமீபத்திலேபோய் வாராய்பெண்கள் முடிமே மங்கையர்க்கரசியே நீயார் உன்நாமதேய மென்ன இங்கேதனியயிருந்து விஞானத்தோடு அரிநாமசங்கீர்த்தனஞ் செய்வதற்குகாரணம் யாதென்று வினவ அதற்கவள் சொல்லுகிறாள் வாராய்இலட்சுமிகோதண்ட பாணிக்கொப்பான அதிருபலாவண்ணிய ஸ்ரீராமனே நான்சதுர்முகனுடையபுத்திரி என்பேர் மோகனாங்கி சர்வேஸ்வராகிய பரந்தாமருடைய திருவடிகளையேதஞ்சமென்று பற்றி அரிவாசரமாகிய ஏகாதசிவிரதத்தை யனுஷ்டிக்கின்ற சத்தியசம்பன்னனெவனோ அந்தப்புருடசிரேஷ்டனையே எனக்குப்பத்தாவாகப் பெறவேண்டுமென்று நிர்மானுஷியமான ஆரணியத்திலிராநின்ற இந்தச்சங்கனச்சோலையில் நெடுநாளாக அரியைப்பசனைசெய்து கொண்டிருக்கிறேனென்றுசொன்னாள் அவள் அப்படிச் சொல்லிக்கொண்டு வரும்போதே மகாராசனுக்கு மோகமதிகரித்துத் தன்னால்சகிக்க வசமல்லாதவனாய்ச் சொல்லுகிறான் வனிதாரத்தினமே உன்னைக்கண்டமாத்திரத்தில என்னைப்புஷ்பபாணங்களை எய்துகொல்லுகின்ற மனமதனுடைய யுத்தத்தைத்தவிர்த்து உன்னைஉன்னாசைக் காவலிலிருந்துகரையேறச்செய்வையாகில் என பிராணனிருக்கும் இல்லாவிட்டால் நில்லாதென்று நானாவிதமாகப் பிரியவசனங்களைச் சொல்லி இரங்கிகேட்கின்ற மகாராசனைப் பார்த்துச் சொல்லுகின்றாள் வாராய்புருஷ சிரேஷ்டனேநீர் அரிவாசரமாகிய ஏகாதசிவிரதத்தை யனுஷ்டிக்கிறவரென்றும் அச்சரணாரவிந்தத்தில் அதிபக்திசிரத்தை யுடையவரென்று பிரமதேவனாலேயே நான்முன்னம் கேள்விப்பட்டிருக்கிறேன் ஆகையால்நான்கோதிவந்த விவாகபுருஷன்நீரேயல்லாமல் மற்றையாரிருக்கிறார்கள் இப்போதுவும்மை ஆலிங்கனஞ்செய்வதிலே எனக்கொரு ஆடங்கலுமில்லையே ஆயினும்நீர் எனக்கொருவரத்தை அரிதிருவடி சாக்ஷியாகப் பிரமாணஞ்செய்து அவள்கேட்ட வரத்தைக்கொடுத்து அதற்குநான் எதுசெய்யத் தக்கதென்றுகேட்க அந்தவரத்தைக் காலாந்தரங்களிலே நீசத்தியந் தவறாமல் பரிபாலனம் பண்ண வேண்டுமென்றுசொல்லி நாமிருவரும் நகரத்திற்குப் போய்த் திருக் கலியாணஞ் செய்துகொண்டு சுகித்திருப்போமென்றுசொல்ல அதற்குமகாராசனு மவன் வாராய்மோகனாங்கியே இப்போது உன் காமாக்கினியினால் தகிக்கப்பட்டுச் சோர்வையடைந்திருக்கின்ற என்னைத் தயைசெய்து ஆலிங்கனஞ்செய்யாமல்நகரத்தில் திருக்கலியாணஞ்செய்தபின்போ ஆலிங்கனஞ் செய்யப் போகிறாய் வீடுவேகும்போதோ கிணறெடுப்ப

தென்றுபலவாறாகச் சோகத்தோடுசொல்லுகின்ற ருக்குமாங்கதமகா
ராசனைப்பார்த்து மோகனாங்கிசொல்லுகிறாள்.

வாரீர்சந்திரகுலோத்துங்கனே பிரமதேவனுடைய புத்திரியாகிய நான்விவாகத்திற்கு முன்னமேஉம்மைத்தழுவுதல் தகுதியாமோவென்றுசொல்ல அதற்கு மகாராசனானவன் காந்தருவமணம் அரசர்களுக்குரியதாகையால குற்றமில்லையென்றுசொல்லிச் சம்மதிக்கச் செய்து அந்தத்தேவகன்னிகையை ஆலிங்கனாதிகளைப் பண்ணிக் கிரீடித்தான் அப்படியிருவருஞ் சுகபோகத்தையனுபவித்துவிநோதமாக வார்த்தையாடிக்கொண்டேகி சாலைக்கு வெளியேவந்து அங்குக்காத்திருந்த சேனைகளில் ஒருவனைப்பார்த்து இரதத்தைக் கொண்டுவரும்படி உத்தரவுசெய்யவுடனே அவனோடிக்கொண்டுவந்த இரதத்தின்மேல் மத்தகஜமும்பிடியும்போல ஆரோகணித்தார்கள் சேனைகளும்வேட்டைக்காரர்களும் புடைசூழ்ந்துவர ஆரணியத்தின்வழியே இரதமானது செல்லுகையில் ஒருடும்பானது அந்தத்தேரிற்பூட்டிய குதிரைகளின் குளம்புகளால் மிதியுண்டு வருந்துவதைக்கண்டு மகாராசன் அனுதாபப்படும்போது அவ்வுடும்பானது பிராணனைவிட்டது அதனுடைய பிராணனானது திவ்வியதேசோமயபுருஷனாய் ஒருமாணிக்கமய விமானத்தின்மேலே ஆகாசவீதியில்நின்று ருக்குமாங்கத மகாராசனுடைய கண்களுக்குமாத்திரந் தோற்றப்பட்டுச் சொல்லுகின்றது

வாராய் ஸ்ரீவைஷ்ணவபரமோபாயநிஷ்டனாகிய ருக்குமாங்கதமகாராசனே நான்பூர்வத்தில்பிராமணகுலஸ்திரியாய்ப்பிறந்து அந்தப்பிரமகுலத்தில்திவ்வியசௌந்தரனாகிய ஒருபுருஷனைவிவாகஞ்செய்துவாழ்ந்திருக்கின்றகாலத்தில் அந்தப்புருஷன் என்னிடத்தில் வியாமோகமில்லாதவனாய் நிரந்தரம்வேசிகாந்தனாகவே திரிந்துக்கொண்டிருப்பான் அவனுக்கு என்னிடத்தில் இஷ்டமுண்டாகும்படி ஒருவேசியினிடத்தில்ஔஷதம்வாங்கிவந்து அவன் அறிந்துகொள்ளாமல் பாலில்சேர்த்துக்கொடுத்தேன் அதுமுதல்என்னிடத்திலே அதிக பிரியமுண்டாகிப்பரத்தையருடைய உறவில்லாமலிருந்தான் நானும்நம்முடையஎண்ணம் பலித்ததென்று அவனோடு போகபாக்கியங்களை அனுபவித்துக்கொண்டிருக்கும் சிலநாள்களுக்குள்ளே நான் மூடமதியால் முன்னேகொடுத்தஔஷதத்தின்உஷ்ணத்தாலேஎன்புருஷனுக்கு க்ஷயவியாதிகண்டு அதனால்நெடுநாள் உபத்திரவப்பட்டுதேகமெலிந்துஎந்தமணிமந்திரஔஷதங்களாலும்அந்நோய்தணியாமலேமரித்தனன் அவன் இறந்தபின் விதந்துவாகி அதிதரித்திரியதசையை அடைந்துஉண்ணவும்

உடுக்கும்போசனமும் வஸ்திரமுங்கிடையாமல் நானாவிதரோகங்களா லேபிடிக்கப்பட்டுத் தேகவியோகமடைந்தேன் கணவனை மருந்திட்டுக் கொன்றமகாபாவியாகிய என்பிராணனை யமதூதர்கள்யாதனா சரீரத்தி னமையச்செய்து யமபுரிக்குக் கொண்டுபோய்ப் புருஷனைக்கொன்ற



பாபந்திருமபடி நரகத்தில் போட்டார்கள் அந்நரகவேதனைகளை வெகு காலம் அனுபவித்து இந்த ஆரணியத்தில் உடும்பாய்ப்பிறந்தேன் உடு ம்பாய்ப்பிறந்திருந்தநான் இப்போது உம்முடைய திவ்யபாதத்திற்கட் டிய அசுவங்களின் கால்களாலேமிதிக்கப்பட்டு வருத்தப்படுவதைக் க ண்டுபரமபாகவதோத்தமனாகிய நீ அநுதாபப்பட்ட அபிமானபாக்கி யவசத்தினால் ஜீவன்முக்தனாகித் திவ்வியதேஜோமய நித்தியசொரூபத் தைப்பெற்றுப் பிரமருத்திராதிகளுடையமனோவாக்குக்கும் எட்டப்படா த அப்பிராகிர்த வைகுந்தத்தையடைகின்றேனென்று மகாராசனைப்ப லவிதமாகக்கொண்டாடி அந்தத்தேஜோமயபுருஷன் மறைந்துவிட்ட னன் பின்புருக்குமாங்கத மகாராசன் அதிகஆச்சரியத்தை யடைந்த வனாய் ஸ்ரீஹரியைத்தியானஞ்செய்து அந்தமோகனாங்கியோடு சரசவார்த் தைகளைப் பேசிக்கொண்டே தன் நகரத்தைநோக்கித் தேரைசெலுத் தினன்,

வசிஷ்டர்வாக்கியம்.

வாராய்ஆதித்தகுலேசனாகிய மருத்வமகாராசனே இந்தப்பிரகார ந்தன்பிதாவாகிய ருக்குமாங்கதமகாராசன் வேட்டையாடித் திரும்பிவ ருவதைத் தர்மாங்கதன் சாரணர்களாலே கேள்விப் பட்டுப் பிராமண மங்கலஸ்திரீகள் மங்களகீதங்களைப் பாடிக்கொண்டு பூரண கும்பங்கள் தீபங்கள்முதலிய சுபசகுனவஸ்துக்களைத் தாங்கிமுன்னே செல்லவும்

மங்களவாத்தியங்கள் முழங்கவும் நால்வகை சேனைகளும் புடைசூழ்ந்
துவரவும் மந்திரிமார்களும் ரிஷிசிரேஷ்டர்களும் பிராமணோத்தமர்க
ளும்நெருங்கிவரவும் எதிர்கொண்டுபோய்த் தன்பிதாவைக்கண்டு பிர
ணாமஞ்செய்து அதிகவுபசாரத்தோடுகோத்துக்கொண்டுவந்து அர
ண்மனைசேர்ந்தான்ருக்மாங்கதமகாராசன் மோகனுதேவியோடுஇரத
த்தைவிட்டிறங்கி அவளைச்சிலதோழிமார்களோடு அந்தப்புரத்திற்கனு
ப்பிவிட்டுச்சபாமண்டபத்தையடைந்து சிங்காசனத்தில்வீற்றிருந்துத
ர்மாங்கதனைப்பார்த்து ஒவ்வொருஏகாதசியிலும்நீயும் சந்தியாவளிமுத
லியஉன்தாய்மார்களும்வள்ளுவனுல்பறைச்சாற்றுவித்துநம்முடைய
மதுஅரசுக்குட்பட்டதேசத்தார்களும் ஹரிதினஉபவாசத்தைக்கிரம
மாகவேஅனுஷ்டித்துக்கொண்டுவருகிறீர்களா வருணாச்சிரமதருமந்த
வறாமல் செங்கோல்செலுத்திவருகின்றாயா தேவதாஸ்திரீகள் அரிபூ
சார்த்தமாகப் புஷ்பங்களெடுக்கின்ற நந்தவனத்தைக்கபடங்கடந்தேறிவ
ருகின்றதாவென்றுவிவரு சமாச்சாரங்களைக் கேட்கின்ற தன்பிதாவை
வணங்கித் தர்மாங்கதன் சொல்லுகிறான்.

வாராய்என்பிதாவே தேவரீருடைய கட்டளைப்படியாவுங் குறை
வில்லாமல்நடந்துவருகின்றனவென்று சொ ன்னான் அதைக்கேட்டுத்தன்
புத்திரனுகியதர்மாங்கதனை இரண்டுகைகளாலுந்தழுவித் தன்பக்கத்தி
லுட்காரவைத்துக்கொண்டு மந்திரிகளும் ரிஷிகள்முதலானபெரியோ
ர்களுங்கூடியிருக்கின்ற அந்தச்சபையார்களைப் பார்த்துத்தான் வாம
தேவர்முதலியமுனிவர்களுடைய ஆச்சிரமத்திற் சென்றதையும் ஆர
ணியத்தில்துஷ்டமிருகங்களைவேட்டையாடி ஆயாசத்தால்சந்தனசோ
லைநிழலையடைந்தளவில் அங்குஅரிநாமசங்கீர்த்தனஞ்செய்துகொண்டி
ருந்தமோகனுங்கியைக்கண்டு மோகித்துவந்ததையும் சாங்கோப சாங்க
மாகத்தெரிவித்துத் தான்கலியாணஞ் செய்துகொள்ள வேண்டுமென்
னுங்கருத்தையும் வெளியிட்டனன் இவற்றையெல்லாங்கேட்டு அவர்
கள்யாவரும் குதூகலமானமனதையுடையவர்களாகி ருக்மாங்கத ம
காராசனைப்பார்த்து நீர் அழைத்துவந்தபெண் அரியினிடத்தில் பக்தி
யுடையவளாய்க் காணப்படுகிறதுமல்லாமல் பிரமதேவனுடையபுத்
திரியுமாயிருக்கின்றாள் ஆதலால் அவளைவிவாகஞ்செய்துகொள்வதில்
யாதொருதடையுமில்லையென்று சொன்னார்கள் உடனேதர்மாங்கத
னென்சிங்காசனத்தை விட்டிறங்கிப் பரபரப்புடனே அதிகசந்தோ
ஷித்தனுய் சந்தியாவளிமுதலிய தாய்மார்களிருக்குமிடத்திற்குச் செ
ன்று அவர்களைவணங்கி வாருங்கள்தாய்மார்களே தம்புருஷன்பாதங்க

ளைக்கழுவியநீர்கங்கையாகவும் அவனைச்சாக்ஷாத்பரப்பிரமமாகவுமகா
விஷ்ணுவாகவும் பாவனைசெய்து அவன்சந்தோஷிக்கும்போதுசந்தோ
ஷித்து துக்கிக்கும்போது துக்கித்து அவன் அன்பைப்பெற்றவர்களிட
த்திலே தானும் அன்புள்ளவளாயும் அவனுக்கு இஷ்டர்களல்லாதவர்க
ளிடத்திலேதானும் இஷ்டமில்லாதவளாயுமிருந்து தன்னழகைமற்ற
வர்கள்கண்டுமகிழவேண்டுமென்னுங்கருத்துச் சிறிதுமில்லாமல்தன்பு
ருஷனை கண்டுகளிக்கவேண்டுமென்கிற எண்ணத்தையுடையவளாய்
ப்போசனமுதலிய உபசாரங்களையும் எந்த உத்தமஸ்திரீ செய்துவருகி
ன்றாளோ அவளைகற்புடையவளென்று இதிகாசபுராணாதிகள் சொல்
லுகின்றன அப்படியேயாதொரு குறைவுமில்லாமல் நடந்துவருகின்ற
மகாபதிவிரதைகளாகிய என் அன்புள்ளதாய்மார்களே உங்களுக்கு இ
ச்சிறுவனாகிய நான் உங்களிடத்திலேசொல்லிக்கொள்ளவேண்டியதொ
ன்றுண்டு அதாவதென்னெனில் நம்முடைய மகாராசனானவர் வேட்டை
க்குப்போன அடவியினிடத்திலிருந்து கிரகித்துக்கொண்டுவந்தபிரம
தேவன்புத்திரியாகிய மோகனாங்கியென்பவளை அவர்விவாகஞ்செய்து
கொள்ளும்படி நீங்க ளெல்லோரும் அவருக்குச் சொல்லவேண்டுமெ
ன்றுபிரார்த்தியாநின்றதர்மாங்கதனைப்பார்த்து அப்படியேசெய்கிறோ
மென்று அவனுக்குவாக்குக்கொடுத்து அனுப்பிவிட்டுத்தங்கள் அந்தபு
ரத்திற்குமகாராசன்வந்தபோது நூறுதேவி மார்களும் எதிர்கொண்டு
போய் உபசாரங்களைச்செய்து அழைத்துவந்து ஓராசனத்திலெழுந்த
ருளப்பண்ணியாவருஞ்சூழ்ந்துவரநின்றுகொண்டுவாரீர் பிராணநாயக
ரே உம்முடைய அடிமைகளாகிய எங்களிடத்திலே உமக்குயாதொருசந்
தேகமும்வேண்டியதில்லைஉமக்குஇஷ்டம்போல நடந்துகொள்வதன்றோ
எங்களுடைய முக்கியகடமை நீர் ஆரணியத்திலேபோய்க் கொண்டுவந்
தமோகனாங்கியைவிவாகஞ்செய்துகொள்ளுமென்று சொல்லியாவரு
ஞ்சம்மதித்தார் இவ்வாறு யாவருடைய சம்மதியைப் பெற்றுக் கொ
ண்டு நல்லசுபமுகூர்த்தத்திலே அந்த மோகனாங்கியை அக்கினிசாட்சி
யாகப் பாணிக்கிரகணஞ்செய்து ஆரியாசாரமாகியஏகாதசிவிரதத்தை
யும் அனுஷ்டித்துப்பதினாறுவருஷகாலமாய் அவளுடையபோகசா
கரத்தில் மூழ்கியிருந்தான்

இந்தக்காலத்தில் தர்மாங்கதமகாராசனானவன் தேசமெங்கும் ஏ
காதசிவிரதந்தவறாமலும் நந்தவனகைங்கரியங்குறைவுபடாமலும்செ
ங்கோல்முறைபிசகாமலும் இப்பூமண்டலத்தை யாளும்படிப்பெரியம
ந்திரிக்குப்பட்டங்கட்டிவிட்டு திவ்விய அஸ்திரசஸ்திரங்களை எடுத்துக்
கொண்டு இரதத்தின்மேலேறி ரதகஜதுரகபதாதிகள் புடைசூழ்ந்துவர

வும்ராண்டேரிமுதலிய வாத்தியங்கள் முழங்கவும் காந்தவர்லோகத்தையடைந்து அந்தக்காந்தவ ராசனை செயித்து அவனால் காணிக்கையாகக்கொடுக்கப்பட்ட நவரத்தினங்களைப்பெற்றுத்திக்குப்பாலகர்களிடத்திலேபோய் அவர்கள்யாவரையும் செயித்துவருகையில் மகாதேவனெயவருணராசன்தோற்றுப்போய்விட அம்மகாதேவனுடையபுத்திரிகையையபகரித்து நாகலோகத்தையடைந்து அந்நாகராசனை வெற்றிகொண்டு அவனுடைய பத்திரிகாரத்தினங்கள் ஆயிரம்பேரையும் அபகரித்துக்கொண்டு வந்து தன்பிதாவினுடையதிருவடிகளில் அந்தரத்தினங்களைச்சமர்ப்பித்துத்தான்செயங்கொண்டவரலாற்றையும ஆயிரத்தொருகன்னிகைகளைக் காந்திரகித்துக்கொண்டுவந்ததையுஞ் சொல்லித்தண்டனிட்டுநிற்கின்ற தர்மாங்கதனை மார்புறத்தழுவி ஆனந்தபரவசனுநக்கண்ணீரால் அவனை நினைத்துஎன்உயிரினுஞ்சிறந்த புத்திரதீபமே புருஷசிங்கமே கண்மணியேயென்று கொண்டாடி அந்த ஆயிரத்தொருகன்னிகைகளையும் தன்புத்திரனுக்குக் கலியாணஞ்செய்வித்து அந்த நவரத்தினங்களை மோகனங்கிக்கே கொடுத்து இஷ்டபோகங்களை யனுபவித்துக் கொண்டிருந்தனன்.

இப்படியனுபவித்துக் கொண்டிருக்கும் நாளில் ஏகாதசி விரதத்துக்குப் பங்கஞ்செய்யச்சமயம்பார்த்துக்கொண்டிருக்கின்ற அந்தமோகனாங்கியினுடைய காமாந்தகாரத்திலகப்பட்டு அவளோடுசரசமாகமதாவசனங்களைப் பேசிவிளையாடி இருவருந் தாம்பூலாதிகளைத் தரித்துக்கொண்டு இருக்குஞ்சமயத்தில்வழக்கப்படி அரிதினமாகிய ஏகாதசி விரதத்தைத் தொடக்கஞ்செய்யுந் தசமிதிதி இன்றையதினமென்று வள்ளுவன் நகரமெங்குந்திரிந்து பறைசாற்றினன் அப்பறைமுழக்கத்தை ருக்மாங்கத மகாராஜன் கேட்டமாத்திரத்தில் அரி ஹரியென்று பகவந்நாமங்களை ஸ்மரித்துக்கொண்டு பஞ்சசயனத்தைவிட்டுப்பூமியில்குதித்து வாயிலுள்ள தாம்பூலத்தை யுமிழ்ந்து விட்டுச் சரசவார்த்தைகளைப்பேசாமல் புருஷோத்தமரை ஸ்மரணை செய்துக் கொண்டிருக்கின்ற மகாராசனைப்பார்த்து இதுபரியந்தம் ராசன் ஏகாதசி விரதத்தை ஆசரிப்பது தனக்கு தெரியாததுபோல் மோகனாங்கி வஞ்சமாகச் சொல்லுகிறாள் வாரீர்என்பிராணசமமாகிய இஷ்டநாயகரேஎன்னுடனே சரசவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தாற்போல் இருந்து சரேலென்றுபூமியிற்குதித்துத் தாம்பூலத்தை யுமிழ்ந்துவிட்டு பகவந்நாமங்களை ஸ்மரிப்பதற்குக் காரணமென்ன இதென்ன ஆச்சரியகரமாயிருக்கின்றது எனக்கு விஸ்தாரமாகச் சொல்லக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற மோகனாங்கியைப்பார்த்து வைஷ்ணவசிரோமணியாய நிஷ்டனு

யெருக்குமாங்கத மகாராஜனவன் சொல்லுகின்றான் வாராய்மோகனங்கியே இன்றையத்தினம் ஏகாதசிமகாவிரதத்தைத் தொடக்கஞ்செய்யுந் தசமிதிதி மேலும்இதுகார்த்திகைமாதம் இந்தமாதம் மற்றமாதங்களுக்குள்ளே முக்கியமானது இதனுடைய விவரணத்தையும் ஏகாதசியினுடையமகாத்மியத்தையுஞ் சுருக்கமாகச்சொல்லுகிறேன்கேளென்று ருக்குமாங்கதமகாராசன் சொல்லுகிறான்



ருக்குமாங்கதமகாராசன்வாக்கியம்

வாராய் மோகனங்கியே நமது பிரேது கஜாயமான டோட்சத்தினால் திருவுந்தியில் சதுர்முகனைப்பெற்று அவனுடையபுருவவேர்வைக்குமிழியினின்றுஞ் சங்காரகவானைத்தோற்றுவித்து அவர்களுக்குச் சிருஷ்டித்தொழிலையுஞ் சங்காரத்தொழிலையுங்கொடுத்து அவர்களுக்குள்ளேதான் அந்தரியாமியாயிருந்து அந்தயிரண்டு கிரியைகளையும் நடத்திக்கொண்டு அம்முறைபின்படித் தான் யுபேந்திரனாகிப் பிராணகோடிகளை ரட்சித்துச் சகலாண்டங்களுக்கும் உள்ளும்புறம்புமாய் நிறைந்து ஷாட்குண்ணிய பரப்பிரமமாய் விளங்காநின்ற சர்வேஸ்வரரானவர்முப்பத்திரண்டுலட்சம்யோசனைவிசாலமுள்ள திருப்பாற்கடலுக்குள்ளேயிராநின்ற பத்துயோசனைப்பரப்பும்ஏழுயோசனையுயரமுமுள்ள திருக்கோயிலில் மூன்றுலட்ச யோசனைநீளமும் ஒன்றரைலட்சம் யோசனை அகலமுமுடைய சேஷசயனத்தின் மீது இரண்டரை லட்சந் தீர்க்கமாகிய திருமேனியுடையவராய்ச் சயனித்துப்பகலிரவுமாகிய காலச்சக்கரநடக்கும்படித் திருக்கண்விழித்துறங்கா நின்றயோகநி

த்திரையிலிருந்து எழுந்தருளுகின்ற பிராதகாலமாகு மிந்தக்கார்த்தி
கைமாசம் ஸ்ரீசர்வேஸ்வரர் திருக்கண் விழித்தருளுகின்ற காலமாக
வும் திரிவிக்கிரமமூர்த்தியானவர் மூன்றடிமண் இரந்து திரிலோகத்
தையுமிரண்டடியா லளந்துக்கொண்டு மற்றோ ரடிக்குத் தன்மேல்தி
ருவடிவைத்துப் பாதாளலோகத்தில் அமுக்கியபோது மகாபலிச்சக்
கிரவர்த்தி திரிவிக்கிரமமூர்த்தியைச் சேவித்து இத்தினத்தில்யாவரும
தீபாராதிகளையேற்றித்தேவரீர் என்விஷயத்தில்கடாக்ஷிப்பசித்திரங்க
ளைச்சொல்லி விரதத்தையாசரிக்கும்படி வரத்தைக்கேட்டுப்பெற்றுக்
கொண்ட அந்தக்காலமாகவும் அக்கினிநக்ஷத்திரமாகியகிருத்திகைநக்ஷ
த்திரமும பௌர்ணமிதிதியும் சம்பந்தப்படுகின்றபடியால் அக்கினியினு
லே ஸ்ரீசர்வேஸ்வரருக்குத் திருட்டிசெய்து சாந்திசெய்யவேண்டிய
காலமாகவும் விளங்காநின்ற இந்தமாசமுழுமையும் லோகேஸ்வரர்க
ளுக்கும் ஈஸ்வரராகிய ஸ்ரீஹரியானவர் அர்ச்சாவதாரராய்எழுந்தருளி
யிருக்கும் திருக்கோயில்களிலும் தங்கள்தங்கள் கிருகங்களிலும்தீபா
ராதிகளை ஏற்றிவைக்கவேண்டு மென்றும்மாமிசமுதலிய தாம்சபதார்
த்தங்களை விலக்கவேண்டுமென்றும் அவற்றைவிலக்காமல் புசித்தவர்
கள் ஊர்ப்பன்றியாய்ப் பிறப்பார்களென்றும மாசங்கள் தோறும் இர
ண்டுபட்சங்களிலும் வருகின்ற ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசிவிரதத்
தை யனுஷ்டிக்காமற்போயினும்இந்தமாசத்துப்பூர்வபட்சத்திலாவது
தசமியிலொருவேளைபோசனஞ்செய்துஏகாதசியில்ஆகாரத்தையொ
ழித்து மறுநாள்துவாதசியில் அருணோதயத்துக்கு முன்னே அரியை
ஆராதித்து ஒருஅதிதியோடு பாரணைசெய்து ஸ்ரீயப்பதியினுடைய
ஆலயங்களிலும் பகவத்குணானுபவஞ் செய்யுமிடங்களிலுஞ்சென்று
அன்றுபகற்பொழுதையும் நித்திரையில்லாமலே போக்கி இராத்திரி
க்கும் போசனஞ்செய்யாமல் இப்படி நான்குவேளை போசனத்தையு
ம் ஒழித்து ஏகாதசிவிரதத்தை யாசரிக்கவேண்டுமென்றும்இம்மாசத்
தில் நோற்கவேண்டிய கிருஷ்ணவிரதத்தை யதாசாஸ்திரமாகக்கொ
ண்டாடவேண்டு மென்றும் இந்தவிரதிகள் நிரதிசயானந்தபரமபதத்தை
யடைவதற்குச் சந்தேகமில்லை யென்றும் வைதிகபுராண இதிகாசங்
கள் கூறுகின்றன ஆகையால் இன்றுகார்த்திகைமாசப் பூர்வபட்சஏ
காதசிக்குமுதல்நாளாகிய தசமிதிதி இத்தினத்தில் நயனபஞ்சசயனத்தி
ன்மேல் உட்கார்ந்து உன்னோடு சல்லாபவார்த்தைகளைப் பேசித்தா
ம் பூலாதிகளைத் தரித்துவைதிகவிரதபங்கஞ்செய்துக் கொள்ளக்கூடா
தென்றுருக்குமாங்கதமகாராசன் சொல்லக்கேட்ட மோகனாங்கி சொ
ல்லுகிறாள் வரீர் என்பிராணபதியாகிய நாயகரே முடிவிலேசொன்
ன கிருஷ்ணவிரதத்தையெப்படி யாசரிக்கிறது ஆசரிப்பதினாலேயுண்

டாகும் பலன் யாது அதுகளை எனக்குவிபிரதமாகச் சொல்லவேண்டு மென்றுபிரார்த்தியாநின்ற மோகனங்கியைப்பார்த்துமகாராசன்சொல் லுகிறான்,



## வசிஸ்டர்வாக்யம்.

வாராய்மார்த்தண்டகுலேசனாகிய மருத்தமகாராசனேஇப்படித்தன் னைப்பிரார்த்தியாநின்ற போகனங்கியைப்பார்த்து ருக்குமாங்கதமகா ராசன்சொல்லுகிறான் கேளாய் பெண்ணமுதமே ஆடிமாத முதலாகிய நான்குமாதங்களுஞ் சிரார்த்தமாதமென்று சொல்லப்படும் இந்தநாலு மாதமும் சதுர்வர்ணத்தார்களும் விரதத்தைநியமித்துக்கொண்டுயதா சாஸ்திரமாக எட்டுஏகாதசியையும் உபவாசமிருந்து தமக்கிஷ்டமானப தார்த்தங்களிலேஏதாவதொன்றைப் புசிக்கிறதில்லையென்றுதங்களுக் குள்ளே சங்கேதஞ்செய்துக்கொண்டு எண்ணெயைத்தின்டாதநெய் யிட்டுக்கொண்டு நெல்லிப்பருப்பாகிய தனைப்பிறகு அதைப்பிராக்கி ஸ்நானஞ்செய்து பிராமணோத்தமர்களாகிய வைஷ்ணவாளை உபசார ஞ்செய்து அழைத்துவந்து ஒருதிவ்வியாசனத்தி லெழுந்தருளப்பண் ணிச் சாளக்கிராமம் மூர்த்திகர்மகோதானம் பூதானங்களைச் செய்து ஐப்பசிமாதமு கடந்தபிற்பாடு இந்தக்கார்த்திகைமாதத்து முப்பது தினமும் கிருஷ்ணவிரதத்தைமேற்கொண்டு ஒருவேளை போசனமும் ஒருவேளைபாலுமாகப் புசித்து அதற்குக்கூடாமையாயிருந்தால் ஒரு நாள்போசனமும் ஒருநாள்பால் கனிமாவுமுதலிய ஆகாரங்களையும் உ ண்டு அரிஸ்மரணைசெய்துகொண்டு கிருஷ்ண விரதத்தையனுஷ்டித்

பார்கள் இந்தமாதங்களில் செய்ததானம் சிறிதாயிருப்பினும் அதுஅந்
ந்தாயிரமாகப் பெருகும் இவ்வாறு கிருட்ணவிரதத்தையாசரிப்பவர்க
ள்ஜன்னமரணமாகிய சமுத்திரத்தைக்கடந்து பிரமருத்திராதி களுக்
கும் அடைகிறதற்குத் துல்லபமாகிய பரமபதத்தை எளிதிலே பெறு
வர்கள் இதுமேற்சொன்ன இதிகாச புராணங்களின கருத்தென்று
சொல்லி வாராய்கோமளமே இன்றுஹரிவாசரத்துக்குத் தொடக்கஞ்
செய்யுந் தசமிதிதியாகையால் தீர்த்தமாடி ஊர்த்துவபுண்டரந்தரித்து
ஸ்ரீபகவானையாராதித்து ஒருவேளைப்போசனஞ்செய்து இராத்திரிக்கு
ஸ்திரீசங்கமமில்லாமல் தனியே தர்ப்பசயனத்தில் சயனிக்கவேண்டு
மென்றனன்.

அதுகேட்டு மோகனங்கியானவள் நாம் பிரமதேவரிடத்திலிருந்
துவந்துநெடுநாளாச்சு இதுவரைக்கும் இந்தராஜனுடைய ஏகாதசிவி
ரதத்தைக்கெடுப்பதற்குச் சமயம் வாய்க்காமற்போய்விட்டது இப்பொ
து அந்தப்பிரமதேவருடைய கடாக்ஷத்தினாலே நல்லசமயம் வாய்த்தது
இந்தக்காலந் தப்பிப்போனால் இனியெப்போது நமக்குக் கிட்டுமென்
றுதனக்குள்ளே ஆலோசனைபண்ணிக்கொண்டு வாராய் என் இஷ்ட
நாயகரே தர்மசொரூபர்களாகிய அரசர்கள் தங்களுடையகுடையின்கீ
ழுள்ளஜனங்களை வர்ணாச்சிரமதர்மந்தவறாமல் செங்கோல்செலுத்தித்
துஷ்டநிக்கிரகம் சிஷ்டபரிபாலனஞ்செய்து நெற்பயிர் முதலானவை
களையழிக்கவொண்ணாமல் மிருகங்களை வேட்டையாடிக்கொன்று புசி
க்கும்படிச்சாஸ்திரங்களில் விதித்திருக்கின்ற முயல் முதலியவற்றைக்
கொண்டுவந்து பாகஞ்செய்து திவ்வியான்னங்களோடுபட்சித்து அதிக
ரூபலாவண்ணியமுள்ள யௌவனஸ்திரீகளோடு நானாவித காமபோகங்
களையனுபவிப்பார்கள் இதன்றோ ராசதர்மமென்று சொல்ல அதற்கு
மகாராஜன்சொல்லுகிறான்.

வாராய்வனிதாரத்தினமே ஸ்ரீஅரிதினமாகிய ஏகாதசியை அவ
தாரஞ்செய்து புசித்தமூடமதியானவன்தமக்கும் ஒப்புமுயர்வுமில்லாத
தஸ்ரீபரந்தாமனை அஜேந்திராதிகளோடு சமானமென்று நினைக்கிறவ
ன் அபௌருஷேயமாய் நித்தியமாய்விளங்காநின்ற வேதங்களை உல்ல
ங்கனஞ்செய்தவன் பிராமணனைப் பசுவைச் சிசுவை ஸ்திரீயைக்கொ
லைபண்ணினவன் சத்துருவால்வருத்தப்பட்டுத் தன்னை அடைக்கலம்
புகுந்தவனைக் கைசோரவிட்டவன் செய்தநன்றிமறந்தவன் ஆலயங்களி
லே புணர்ச்சி செய்தவன் தனக்குப்போதகாசிரியனைவணங்காதவனு

ன்றவன் யுத்தகளத்தில் தன்னரசனை கைவிட்டோடினவன் மகானுக்
களைக்கண்டுந் தொழாதவன் தாய்தந்தையர்களைத் தூஷணித்தவன்
தேடிவந்தவிருந்தையோட்டிவிட்டுத் தனியே சாப்பிட்டவன் பரதாரா
கவனஞ்செய்கிறவன் தானமிந்தை இல்லையென்றவன் முதலானவர்க
ள் அடைகிறநரகத்தைப் பெறுவானென்பது புராணசித்தம் ஆகையா
ல் இந்தமகாவிரதத்தை யனுஷ்டிக்காமல் விடமாட்டேனென்றுசொ
ல்லுகின்ற ருக்குமாங்கத மகாராசனைப்பார்த்து மோகனுங்கிசொல்லு
கின்றாள்.

சேளீர்பூபதி நீர் என்னுடனே சரசசல்லாப வார்த்தைகளைப்பே
சியென்னைக்காமந்தகாரத்துக்குள்ளாக்கி ஏறவிட்டேணியை வாங்குவா
ரைப்போல என்னோடு கலவாமல் தனியேயிருக்க எண்ணங்கொள்வது
உமக்குத்தகுமோ இப்போதுயென்னை ஆலிங்கனாதிகள்செய்து அணை
யாவிட்டால் சகிக்கஎன்னால்முடியுமோ காலதாமசம்பண்ணாமல் என்
னுடையகோரிக்கையை ஈடேற்றி இன்றுமுழுதும் என்னோடுசேர்ந்தி
ருந்து இஷ்டபோகங்களை யனுபவிக்கக்கடவீரென்று இன்னும்பலவா
றாகக்கேட்டுக்கொள்ளுகின்ற மோகனுங்கியைப் பார்த்து மகாராசன்
சொல்லுகிறான்வாராய்குணசிலையே முத்திசாதனமாகிய இந்தவைதி
கவிரதத்தை யாசரிக்காமல் விடமாட்டேன் விரதபங்கேரிடும்படி யி
ன்றுவுன்னோடு சங்கமுஞ் செய்யமாட்டேனென்று திடமாகச் சொ
ல்லினன் இப்படிச்சொல்லிய இந்த மகாராசனுனவன் நம்முடையவச
ப்படுகிறவனாகக் காணப்படவில்லையே ஆயினும் நாம்முன்னே இவனி
டத்தில்பெற்றிருக்கும் வரத்தைக்கொண்டு இவன் விரதத்தைப் பங்க
ஞ்செய்வோமென்று தீர்மானித்துக் கொண்டு சொல்லுகிறாள் வாரீர்
சத்தியவிரதசிலரே ஆதியில் வேட்டைக்குவந்து மந்தரகிரி சமீபத்தி
லே ஒருதிவ்வியசந்தனச்சோலையில் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ்செய்து
க்கொண்டிருந்த என்னைக்காந்தருவவிவாகமாகப் புணர்ந்தபோதுமாத
வருடையதிருவடியின்மேல் பிரமாணஞ்செய்து நீர் கொடுத்திருக்கிற
வரம் ஒன்றையும இப்போதுஎனக்குத்தயைசெய்யவேண்டும்அதாவ
து இன்றையதினம் நீர் என்னுடைய மனோபீஷ்டப்படி என்னோடு
சேர்ந்து சுகபோகங்களை யனுபவித்துஎனக்குத்திருத்திசெய்வதுதான்
வேறன்றென்று சொல்லுகிற மோகனுங்கியைப் பார்த்து ருக்குமாங்க
தமகாராசன் சொல்லுகிறான் வாராய்சுந்தரி உனக்கு நான்கொடுத்திரு
க்கிரவரத்தை தருகிறதில்லையென்று தடுக்கிறதில்லை யாயினும் இந்த
ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசிவிரதத்தை ஆதரிக்காதவனுடைய ஜன்மம்

சந்திரோதயமில்லாத இராக்காலமும் நற்குணநற்செய்கையமைந்த கு
லஸ்திரீயில்லாதவீடும் கற்றுவல்லவரில்லாதசபையும் ஸ்ரீகோவிந்தரு
டைய ஆலயமில்லாததேசமும் துளசியில்லாத நந்தவனமும் நாயகனி
ல்லாதஸ்திரீயும் தயைசாந்தியில்லாததவமும்போல வியர்த்தமாச்சே
ஆகையால் நீஇன்றுவிரதத்திற்கு மாத்திரம் குறைவுசேரிடாமல் என்
னுயிரையாவது என்தேவிமார்களையாவது என்பிரியமுள்ளபுத்திரனை
யாவது என்சகலசம்பத்துக்களையாவது கேட்டால் யாதொருதடையு
மில்லாமல்கொடுக்கிறேன் அரிவிரதத்தைமாத்திரம் கெடுக்கவைக்க
வேண்டாமென்று மிகவும் இரந்துகேட்கின்ற மகாராஜனைப்பார்த்து
மோகனாங்கி சொல்லுகின்றாள் வாரீர் ராசசிரேஷ்டரே எனக்குச்செய்
திருக்கிறசத்தியத்தைக் காப்பாற்றாமல் ஏகாதசிவிரதத்தை மாத்திரம்
அனுஷ்டித்து என்னபலனைக் காணப்போகிறீர் பூர்வத்தில்விசுவாமித்
திரருக்குச்சொல்லிய வாக்கு தத்தத்தை நிறைவேற்றுவதி னிமித்தம
ன்றோ அரிச்சந்திரமகாராசனானவர் தமமுடையபாக்கியங்களையிழந்து
பெண்சாதிபிள்ளைகளையும் விட்டுப்பிரிந்து ஒருபுலையனுக்கும் அடிமை
ப்பட்டார் மேலும் தசரதசக்கரவர்த்தியானவர் தம்முடைய இளைய
பெண்சாதிக்குத்தாம்கொடுத்திருந்த வரத்தைப் பரிபாலனஞ்செய்யு
ம்பொருட்டன்றோ தம்முடையபிராணனையும விட்டுவிட்டார் இன்
னும் அனேகசத்திய சந்தனர்களாகிய அரசர்களுடைய சரித்திரங்க
ளைக்கேட்டுமறியீரோ உத்தமமாகிய சந்திரவமிசத்து மகாராசனுவேும்
அரிபக்தனுமாயிருந்து நீர் இப்படிச்சத்தியந்தவறுகிறதா யிருந்தால்
நானென்னசெய்யப் போகிறேனென்று அதிகதுக்கத்தோடு கண்களி
ல்ஜலம் தாரைதாரையாயொழுகும்படித்தன்னுடலில்தரித்திருந்தவி
வியாபரணங்களையெல்லாங்கழற்றி யெறிந்துவிட்டு முகத்திலணிந்த சி
ந்தூர திலகத்தையழித்துப் புஷ்பங்களுதிர்ந்தபூங்கொம்புபோலத் த
ரையில்விழுந்து புரண்டு புலம்பிக்கொண்டிருந்தனள்.

இதைகண்டமகாராசனானவன் இவளிடத்தில் அல்பபோகத்தைநயி
ச்சிதன்றோ இப்போது இந்தச் சங்கடத்துக்குள்ளானேனும் இதென்
னமதிமோசம்போனேனேயென்று தனக்குள்ளே கிலேச மடைந்து
பெருமூச்சுவிட்டுச் சோர்ந்துசுவரிலேசாய்ந்து சித்தப்பிரமை யடைந்

திருந்தனன் இந்தமோகனாங்கியினுடைய கூக்குரலைக் கேட்டுத் தர்மாங்கதனானவன் நம்முடைய அரண்மனைக்குள்ளே இதுவரையுங்கேட்டறியாத அழுகுரல் இன்றையதினம் பிறப்பதற்குக் காரணமென்ன நம்முடைய பிதாவாகிய மகாராஜனுக்குத்தான் என்னசம்பவித்ததோ மற்றவர்களுக்குத்தான் என்னதீங்குநேரிட்டதோ எதுவோ அதை யறியவேண்டுமென்று தனக்குள்ளே அதிக விசாரத்தையுடையவனாய்ச் சீக்கிரமாக ருக்குமாங்கதனுடைய இருப்பிடத்துக்குவந்து மகாராசன் சோர்ந்திருப்பதையும் மோகனாங்கி பூமியிற்புரண்டுகொண்டு புலம்பலையும் பார்த்து அவ்விருவரையுஞ்சேவித்து மோகனாங்கிக்குச் சமீபத்திலேபோய் வாரீர் என்மாதாவே உமக்கு யாராலேஎன்னகுறை நடந்தது அதை உம்முடைய புத்திரனாகிய அடியேனுக்குச் சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்திக்கின்ற தர்மாங்கதனைப்பார்த்து மோகனாங்கிசொல்லுகின்றாள் வாராய் தர்மாங்கதா யாரும் யெனக்கொரு பொல்லாங்கு செய்யவில்லை உன்னுடையபிதாவானவர் ஆதியில் என்னைவிவாகஞ்செய்துகொள்ள அழைத்துவரும்போது எனக்குஒருவரங் கொடுத்திருந்தார் அந்தவரத்தை இன்றைக்கு எனக்குத் தரச்சொல்லிக்கேட்டால் அதைத்தடைசெய்கின்றனர் இதுவேயல்லாமல்மற்றொருவரால் எனக்கொருபொல்லாங்குநேரிடவில்லை முன்னிருந்த சந்திரவம்சத்து ராசர்கள் ஒருவருஞ் சத்தியந்தப்பிப்போனதில்லையே இப்போதுயிவர் எந்த ஏதுவினாலே அதிசயத்துக்கு உட்படுகிறவராகக் காணப்படுகிறார் இப்படிப் பிரமாணத்தைக் காப்பாற்றாதவரிடத்தில் பாரியாளாகவிருந்து வாழ்வதிலும் பிராணனைவிட்டுவிடுகிறது சர்வோத்தமமன்றோ வென்று பலவாகச்சொல்லுகின்ற மோகனாங்கியைப்பார்த்துத் தர்மாங்கதன் சொல்லுகின்றான்.

வாரீர் அம்மா நம்முடைய மகாராசாவானவர் சத்தியந் தவறுகின்றவரல்லர் நான் அதையறிந்துவருகிறேன் நீரொன்றுக்கும்பயப்படவேண்டாமென்றுதேற்றிவிட்டுத் தன்பிதாவாகிய ருக்குமாங்கதமகாராஜனிடத்திற்சென்று வாரீர் என்பிதாவே நீர்தமக்குச்செய்திருந்தசத்தியத்தைப் பிசகுகிறதாக என்தாயாகிய மோகனாங்கியம்மாள்சொல்லுகிறாளே பிரமகல்பம்வந்தபோதினுஞ்சத்தியத்திலிருந்து மாறாதபுருஷசிரேஷ்டராகிய நமக்கு இந்தஅபவாதம் இப்போது வருவதற்குநிமித்தமென்னவென்று வணங்கிக் கேட்கின்ற தர்மாங்கதனைப்பார்த்து விதர்ப்பதேசராசனாகிய ருக்மாங்கதன்சொல்லுகிறான் கேளாய் அருமைந்தபிள்ளையே நான்பூர்வத்தில் அவளுக்குஒருவரங்கொடுத்திருந்ததுண்டு அ

ந்தவரத்துக்காக மகாவிரததினமாகிய இன்று நான் தன்னோடுகலந்து இஷ்டபோகங்களை யனுபவிக்கும்படி என்னைத்தாபிர்த மாகக்கேட்கின்றான் விரதபங்கம் நேரிடவொட்டாமல் வேறேதைக்கேட்பினும் நான் தருகின்றேனென்பது இனியவசனங்களாற் கேட்டுக்கொண்டாலும் எனக்கு இணங்கவில்லையே இதைத்தான் சத்தியம்பேசுகிறதாகச்சொல்லுகின்றாள் யிதற்குநா னென்னசெய்யப் போகிறேனென்று தனக்குள்ளே அதிகதுக்காக்கிராந்தனாய்ச் சொல்லினன் இதுகேட்டுத் தர்மாங்கதனானவன் நம்முடைய பிதாவாகிய மகாராசனானவர் விரதத்துக்குச்சிறிதும் குறைவுசம்பவிக்காமல் சத்தியத்தையும் நிறைவேற்ற வேண்டுமே இது எப்படி முடியப்போகிறதென்று தனக்குள்ளே ஆலோசித்து அரியைத் தியானித்துக்கொண்டே தனதாய்மார்களண்டையிற்போய் இந்தச் செய்திகளையெல்லாம் விவரித்துச் சொன்னான் சொன்னவுடனே அந்த நூறுதேவிமார்களும் ஓகோ நம்முடைய நாயகருக்கு இப்படிப் பட்டதாமசங்கடமும் நேரிட்டதோவென்று சிந்தாகுலத்தை யடைந்தவர்களாய் சீக்கிரத்திலே தங்கள்நாயகனாகிய மகாராசனிடத்திற்போய் அவர்களுக்குள்ளே சிறந்தவளாகிய சந்தியாவளியென்பவள் சொல்லுகின்றாள்.



வாசீர் எங்களுக்குப்பிராணபதியாகிய நாயகரேநீர் சகலசாஸ்திரங்களையும் விசாரணைசெய்தவராக இருந்தும்எவ்வளவேனும ஆலோச

னையில்லாத காரியத்தைச் செய்துக்கொண்டீர் எங்களுக்குத்தெய்வமாகியஉம்முடைய கருத்துக்கிசைந்து நடந்துக்கொள்வதன்றோ எங்களுடைய முக்கியகடமையென்றுநினைத்து ஆதியில் நீர்யத்தனித்த விவாககாரியத்துக்கும் ஒத்துக்கொண்டோம் அதனாலன்றோ இப்படிப்பட்டசங்கடம் நேரிட்டது இதுவும் ஸ்ரீசர்வேஸ்வரருடைய சங்கல்பமேயல்லாமல் வேறேஎன்னயிருக்கின்றதென்று சொல்லிவிட்டு மோகனாங்கியினிடத்திற் சென்று வாராய் தங்கையே மோகனாங்கி என்னகாரியஞ்செய்தாய் இதோசித்திரப் பிரதமைகளாலும் முத்துமாலைகளாலும் புஷ்பமாலைகளாலும் அலங்காரஞ்செய்து பனிநீர் தெளித்துப் பஞ்சசயனங்களை விரித்திருக்கின்ற சப்ரகூட மஞ்சமிருக்கச் சுகுமாரமாகிய மேனியில் புழுதிபொருந்தும்படி ஒன்றுமில்லாதவளைப் போலப் பூமியில் புரளுவானேன் இதென்னகோலம்? எழுந்திரு எழுந்திரென்றுதன்னிரண்டு கைகளாலுஞ்சேரத்தழுவி எடுக்காநின்றசந்தியாவளிதேவியினுடைய இரண்டுகரங்களையும் நீக்கிவிட்டு மறுபடியுந் தரையில்படுத்துக் கண்களில் நீர்பெருகத் துக்கித்துக் கொண்டிருந்தனள்.

அதுகண்டு சந்தியாவளிதேவியானவள் அஞ்ஞானம்நிறைந்த மூடமதிகளை நானாவிதமாகச் சிலாகித்துப் பிரியவசனங்களைப்பேசியன்றோ வசியப்படுத்த வேண்டுமென்றுதனக்குள்ளே நினைத்துக்கொண்டு சொல்லுகின்றாள் வாராய் சகுணபூஷணமே தயை சாந்தம் சத்தியம் விரதம்முதலிய சற்குணங்களுக் கிருப்பிடமாயும் திடகாத்திரராயும் திவ்வியசுந்தரராயும் நம்மிடத்தில் அதிகபிரீதியுடையவராயும் இந்தப்பூமண்டலத்துக்கு நிருபராயும் விளங்காநின்ற ராசசிரேஷ்டரை ஸ்ரீமுகுந்தருடைய கடாக்ஷத்தாலும் நம்முன்னோர்கள்செய்த தவத்தாலும் நாம்நோற்றநோன்பாலும் நமக்குக்கணவனாகப் பெற்றிருக்கிறோமேமெக்கு ஒருகுறைவு முண்டோ வாராய்மோகனாங்கி மகாராசனானவர் உன்னைப் பாணிக்கிரஹணஞ் செய்தபின்பு எங்களெல்லோரையும் அனுதாரஞ்செய்து உன்னிடத்திலேயே முக்கிய இஷ்டத்தையே வைத்து உன்சொற்படி நடந்துவருவதை நானும் மற்றத் தொண்ணூற்றொன்பது தேவிமார்களுங் கண்டு எள்ளளவேனுமவருத்த மில்லாதவர்களாய் அவருடைய திருவுளத்துக்கு உங்களால் ஒராபாசமும் உன்

டர்க ஒட்டாமல் நீங்களிருவரும் ஒருமித்து வாழ்ந்துக்கொண்டிருந்தால் அதுவே எங்களுடைய வாழ்வாக நினைத்துக்கொண்டிருந்தோம் இதென்னகண்மாயம் இதுயார்செய்த வஞ்சனையோ நீ மனோசஞ்சலத்தையடைந்து தரையிற்புரள மகாராசரும் நெஞ்சத்துணிந்தாரோ வாராய் பெண்கள் நாயகமே உன்மனதிலிருக்கின்ற வியாகுலத்தையெனக்குச்சொல்லக்கடவாயென்று அவளுடம்பிலிராநின்ற தூசைத்துடைத்துக்கொண்டே இனியசொற்களால் வேண்டிகேட்கின்ற சந்தியாவளிதேவியினுடையமுகத்தைப்பார்த்து ஆளகாரத்தோடு தேம்பித்தேம்பி சொல்லுகின்றாள்.

வாராய் சந்தியாவளிதேவி இந்தருக்குமாங்கத மகாராசனவர் ஆதியில் எனக்கொரு வரங்கொடுத்திருந்தார் அந்த வரத்துக்காக இன்றைத்தினம் என்னுடனேகலந்து இஷ்டபோகங்களை யனுபவிக்கும்படிக்கேட்டேன் அதைமறுத்துச் சத்தியத்தைப் பிறளுகிறார் நான் மற்றொன்றுங் கேட்கவில்லையே இதை என்விஷயத்திலே செய்யமாட்டாமல் சத்தியத்தையே தவறிப்போகின்றவரிடத்திலிருந்து இனி என்ன வாழ்வு நாம் வாழப்போகிறோமென்று எனக்குள்ளே தோற்றப்பட்டு அதிகவிசனத்தை யடைந்திருக்கிறேனே யல்லாமல் மற்றொருகுறைவுமில்லையென்று சொல்லாநின்ற மோகனாங்கியைப் பார்த்து சந்தியாவளி சொல்லுகின்றாள் வாராய்விவேகருண சுந்தரி விவாகத்துக்குமுன்னே தாய்தந்தையர்முதலிய மூத்தோர்களுடைய சொல்லின் வழியிலும் கலியாணம் நடந்தபின் நம்முடைய மணவாளன் அழகும் நற்குணங்களும் சம்பத்துமில்லாமல் குரூபியாகவும் விவேக சூனியனாகவும் தரித்திரனாகவும் இருந்தபோதினும் அவனுக்கு வேண்டிய உபசாரங்களை செய்வதில் மனஞ்சிறிதுங்கூசாமல் அவனை தெய்வமாகப்பாவித்து அவன்சொல் வழியிலும நின்று தமக்கென யாதொரு சுதந்தரமுமில்லாமல் நடப்பதன்றோ உத்தமஸ்திரீகளுக்குப் பரமநாமம் இதிருக்கட்டும் எவளொருத்திதன்புருஷன் சொல்லைமீறி நடக்கின்றாளோ அந்த அதமஸ்திரீ புழுவாகப்பிறப்பாள் இதைக்குறித்து எனக்கு அனுபவசித்தமாகிய ஒரு விசித்திரகதை சொல்லுகிறேன் கேளென்று சொல்லுகின்றாள்.



சந்தியாவளி தேவி வாக்கியம்.

கேளாய் பிர்மதேவருடையபுத்திரி காரத்தினமே எனக்குவிவாகம் நடப்பதற்குமுன்னே மாளவதேசாதி பதிபாகிய என்பிதாவினுடைய சமக்ஷத்திலிருக்கும்போது பிர்மாதிபிபீலி காந்தமான சமஸ்த பிராணகோடிகளுக்குங் காமத்தை உண்டாக்கி லோகவிர்த்தி செய்யாநின்ற இட்சுகோதண்ட பாணியாகிய மன்மதனைக்குறித்துக்கலியாணமில்லாத கன்னிகைகள் சகலசுகுணங்களுமமைந்த அதிசௌந்தரபுருஷன்களுக்குப் பர்த்தாவாகவும் தங்களுடையமனம் அன்னியபுருஷர்களிடத்தில் செல்லாமல் தங்களுக்குரிய நாயகனிடத்திலேயே பற்றும்படியாகவும் தைமாதத்தில் நோற்கின்ற விரதத்தினத்தில் நான் உபவாசமிருந்து என்தோழிமார்களோடுவிளையாட்டுத் தனத்தால்மடைப்பள்ளியண்டைபோனேன் போசனசமையத்தில் மடைத்தொழிலாளர்கள் பெருங்கட்டை களைப்பிளந்து கொண்டிருந்தனர்கள் அவர்களிலே ஒருகட்டையின் பிளந்தகட்டையி லிருந்து ஒருபுழு வெளிப்பட்டு ஆயாசத்தாலே வெளியமாட்டாமல் சோர்ந்திருப்பதைக்கண்டு பரிதபித்து என்கையி லெடுத்துச் சற்றுநேரம் வைத்துக் கொண்டு சைத்தியோபசாரஞ் செய்தேன் அப்போது அந்தக்கிருமியானது மூர்ச்சை தெளிந்து என்னைப்பார்த்துஅதி ஆச்சரியகரமாகச் சொல்லுகின்றது.

வாராய்சந்தியாவளி நான்முன்பிறப்பிலேதனுட்டியனென்கிறவொருசிற்றரசனுக்குப் புத்திரியாய்ப்பிறந்திருந்தேன் ஸ்ரீவிஷ்ணுபக்தனாகவும்மிகவும் சாதுவாகவுமிருந்த அரியாத இந்தபமென்னும் பெயருடையபுருஷனுக்கு வாழ்க்கைப்பட்டு அவனோடுசுகபோகங்களை யனுபவித்துக்கொண்டுவருங்காளில் அந்தப்புருஷன பகவத்தங்கரிபத்தில் தன்னிடத்திலுள்ளபொருள்களையெல்லாஞ்செலவழிந்தான்மரக்கலங்களிலேறிப் பாரசீகமுதலியஅன்னியதேசங்களிற்போய்ச் செய்யும்வியாபாரத்தில்

நஷ்டம்வந்தபடியால் என்பிதாவானவன் எனக்கிட்ட ஆபரணங்களை யும் தனங்களையுஞ் சிறிதுசிறிதாக என்னிடத்தில்வாங்கி அந்தக் கை ங்கரியத்திலேயே செலவிட்டுக்கொண்டு வருவோம் அப்படி செய்யும் நாள்களிலே ஒருநாள் ரத்தினக்கடகத்தைக்கேட்டார் நான் மூடத்த னத்தால் அவர்சொல்லை மறுத்து இதுபரியந்தம் பகவத் கைங்கரியஞ் செய்து நீர்வாரிக்கொண்டது போதும் இந்தக்கடகத்தை நான் கொடு க்கிறதில்லையென்று வெறுப்பாகச் சொன்னேன் அதன்மேல் அவர் இனி நாம்மென்னசெய்யப்போகிறோம் கைங்கரியம் எப்படி நடக்கப் போகிறதென்று தனக்குள்ளே வியசனத்தையடைந்து நாவிக சாஸ்தி ரத்தில் தான்தேர்ந்தவராதலால் ஒருவியாபாயினிடத்தி லமர்ந்து அந்த வர்த்தகனுடைய மரக்கலத்திலேறித் திபாந்தரங்களுக்குப் போகும் போது வழியில் மறக்கலமுடைந்து அதிலுள்ள சனங்களும் பண்டங் களும் நஷ்டமாகி என்கணவர் மாத்திரம் முகுந்தருடைய கடாட்சத் தாலே ஒருபலகையைப்பற்றி நீந்திக்கொண்டு இலங்கையைச்சேர்ந்த ஒருசிறிய திபத்தையடைந்தார் அங்குள்ள சிலபழ வர்க்கங்களைப் புசி த்து ஒருவிருட்சத்தினடியில் படுத்து இவ்வாறு நாள்களை கழித்துக் கொண்டு வருகையில் ஒரு ராட்சதனானவன் காசிதேசத்து ராசனு டைய குமாரத்தியை சிறையெடுத்துவந்து தான் கலியாணஞ்செய்துக் கொள்ள அவ்விடத்தில் வைத்திருந்தான் அவ்வரக்கனுடைய எண்ண த்தை அவன் மனைவியறிந்து சிறையிலிருக்கின்ற ராஜகுமாரத்தியைப் பார்த்து இரகசியமாகச்சொல்லுகின்றாள் வாராய்ராசகன்னிகையே உ ன்னை பாபிஷ்டனாகிய என்புருஷன் கலியாணஞ்செய்துக்கொள்ள எ ண்ணங்கொண்டிருக்கிறான் நீயோ மனுஷியஸ்திரியாயிருக்கிறபடியால் அவனைக் கட்டிக்கொண்டு என்னசுகம் காணப்போகிறாய் உன்னைக் கு றித்து எனக்குண்டாகிய பச்சாதாபத்தாலாக்கும் இந்தவார்த்தைகளை உன்னிடத்திலே பேசினேன் இப்போது நீயும்நானும் க்ஷேமப்படும் படியான உபாயம் ஒன்றிருக்கிறது அதை செய்யலாம் வாராய் சுகு மாரி இந்த ராட்சதன் மகேந்திரனைக்குறித்துத் தவஞ்செய்து பெற்றி ருக்கின்ற சூலாயுதத்தை இதோ ஆலமரத்து நிழலில் சயனித்திருக்கி ன்ற மகாபுருஷனிடத்திலே கொடுத்து இவ்வாயுதத்தை பிரயோகிக் கும்படியான மந்திரத்தை என்புருஷன் எனக்குபதேசித்திருக்கிறான் அந்த மந்திரத்தையும் உபதேசித்து அவனைக்கண்டு அரக்கனைக் கொ ன்றுவிட்டு உங்கள் பட்டணஞ்சேர்ந்து நாமிருவரும் அவனையே விவா கஞ்செய்துகொண்டு மூவரும் சுகமாய் வாழ்ந்திருப்போம் உன்னுடை ய சம்மதி என்னவென்று கேட்கின்ற அரக்கியைப் பார்த்து ராஜகன் னிகை சொல்லுகிறாள்.

வாராய் எனக்கு இதோபதேசத்தைச்செய்கின்ற சகோதரியே உன்னுடைய கருத்தின்படியே நடந்துகொள்ளுகிறேன் தாமதஞ்செய்யாமல் சீக்கிரத்திலேதானே இந்தக் காரியத்தை முடிக்கவேண்டுமென்று சொல்ல உடனே அரக்கியானவள் சூலத்தைக் கையிலெடுத்துப் போய்ஆலமரத்துநிழலில் நித்திரைசெய்கின்ற புருஷசிரேஷ்டனை யெழுப்பி என்னைக்கண்டு பயப்படவேண்டாம் இந்தச் சூலத்தினாலே என்புருஷனைக் கொலைசெய்துவிட்டால் நானும் மற்றொரு ராசகன்னிகையும் உன்னையேவிவாகஞ்செய்து கொள்ளுகிறோம் மேலும் உன்னுடைய தேசத்துக்கு நான் கொண்டுபோய் விடுகிறேனென்று சொல்ல அதுகேட்டு இதுவும் பகவத்சங்கல்பந்தான் இதை மறுத்துவிட்டால் இந்த அரக்கியே நம்மைக்கொல்வாளென்று தனக்குள்ளே ஆலோசித்து அப்படியே செய்கிறேனென்றுசொல்ல அவனை அழைத்துக்கொண்டுபோய் மதுமாம்ச பட்சணைசெய்து உன்மத்தனாகத் தன்னைமறந்திருக்கின்ற இராக்கதனைத் தூரத்தில் மறைந்திருந்துகாட்டி மந்திரோபதேசமுஞ்செய்தனள். அந்தக்குருநிலமன்னனாகிய ஸ்ரீஹரிபாத இருதயனானவன் ஸ்ரீ அச்சுதரைத்தியானஞ்செய்து மந்திரத்தை யுச்சரித்துச் சூலத்தைவீசி அந்தஅரக்கனைப் பிராணஹதஞ்செய்துவிட்டான் உடனே அந்தராட்சதியானவள் ராஜகன்னிகையை அழைத்துக்கொண்டு அந்தச் சிற்றரசனிடத்திலேவந்து சேர்ந்து நீங்களிருவரும் என்புஜங்களின் மேலேறிக்கொண்டால் உமக்கிஷ்டமான இடத்துக்குக்கொண்டுபோய் விடுகிறேனென்றுசொல்ல அதைக்கேட்டு ராஜகன்னிகையானவள் என்பிதாவினுடைய நகரம்போய்ச் சேருவோமானால் நாம் மூவரும்கூடிச் சுகமேவாழ்ந்திருக்கலாமென்றுசொல்லினள் அது நல்ல ஆலோசனைதானென்று ஸ்ரீஹரிபாத இருதயனும் ஒத்துக்கொள்ளவே அரக்கியானவள் அவ்விருவரையும் இரண்டு தோளின்மேலும் ஏற்றிக்கொண்டு தன்மாயாசக்தியினால் முத்திஸ்தலமாகிய காசியில் ஒரு சத்திரத்தைச் சேர்ந்தனளென்று தன்கையிலிருக்கும் புழுவானது சொன்னதாகச்சொல்லிக்கொண்டு வருகின்ற சந்தியாவளியைப் பார்த்து மோகனாங்கியானவள் கேட்கின்றாள் வாராய் சந்தியாவளி தேவி காசியை முத்திஸ்தலமென்று சொன்னையே அதுஎப்படி எனக்குச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க அதுகேட்டு சந்தியாவளியானவள் இவள் யதார்த்தமாக துக்கத்தையுடையவளாய் இருப்பவளானால் காசிதேச சரித்திரத்தையுங் கேட்பாயோ மேலும் சதுமுகனுடைய புத்திரியாகையால் இவளிடத்திலும் துஷ்டநினைவுகளுண்டாகுமோ இப்போது மகாராஜனுடைய ஸ்ரீஹரிவாசா விரதபங்கஞ் செய்ய இவள் யத்தனித்திருப்பதற்குக்காரணம் ஏதோ விருக்கின்றது அது பின்

னே தெரியவருமென்று தனக்குள்ளே எண்ணிக்கொண்டு சொல்லு கின்றாள்.

கேளாய் மோகனுங்கி பூர்வத்தில் ஸ்ரீசங்கரபகவானனவர் பிரம தேவருடைய சிரசைக்கிள்ளி யெறிந்தபாபமானது தம்மைத் தொடாவும் பிரம்மகபாலமானது கையிற்கவ்வவும் அவ்விரண்டினாலும் அந்த ருத்திரபகவானனவர் சித்தப்பிரமையடைந்து இந்தப் பாதகத்தையும் எப்படித்தொலைக்கப் போகிறேனென்று தமக்குள்ளே வியாகுலத்தை யடைந்து ஸ்தலவாசஞ்செய்துக்கொண்டுவருகையில் பதரிகாச்சிரமத்திற்போய் நாராயணரிஷியால் பிரம்மகபால விமோசனப்பெற்று அங்கிருந்து காசியைவந்து அதனெல்லையைத் சேர்ந்தமாத்திரத்திலே விர் மஹத்தி நீங்கிவிட அந்தத்திவ்வியஸ்தலத்தி லெழுந்தருளி யிராநின்ற ஸ்ரீமாதவப் பெருமாளைப் பிராணமஞ்செய்து ஸ்ரீ கயிலாயத்துக்குப் போக உத்தேசித்து அந்த எல்லையைக்கடந்தவுடனே பழையபடியே அந்தப்பிரம்மஹத்தியானது தம்மைசூழ்ந்துகொள்ள அதைக்குறித் துத் துக்கமடைந்து திரும்பிப்போய் ஸ்ரீமாதவப்பெருமாளைக் கண்டு சேவித்துவாரீர் லோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரரே நீர் வசிக்காநின்ற இந்தஸ்தலத்தைச்சேர்ந்த மாத்திரத்தில் என்னைவிட்டு நீங்கியபாதகமானது இந்தஸ்தலத்தின் எல்லையைவிட்டுத் தாண்டினவுடனே என்னைப்பிடிக்கின்றது ஆகையால் நீரிருப்பதினுல் அதிக பரிசுத்தத்தைப் பெற்றிருக்கின்ற இந்தஸ்தலத்தில் நான் வாசம்பண்ணும்படிப் பரம கருணை செய்யவேண்டுமென்று பிரார்த்தியாநின்ற பரமசிவனைப்பார்த்து ஸ்ரீசர்வேஸ்வரரானவர் இன்றுமுதல் இவ்விடத்திலே வாசஞ்செய்யக்கடவாயென்று அந்தக் காசியைவிட்டுத் பிரயாகையி லெழுந்தருளினர் அன்றுமுதல் காசியில் காளகண்ட திரிநேத்திரராகிய ருத்திரபகவானனவர் பார்வதிசமேதராய் வாசஞ்செய்துக்கொண் டிருக்கையில் சிலமகாருஷிகள் முத்தியைவிரும்பி அந்தம் பரிசுத்தஸ்தலத்தில் வந்து தம்மைக்குறித்துத் தவஞ்செய்தனர்கள். அதைக்கண்டு பரமசிவனனவர் மகமேருவில் ரத்தினமயமண்டபத்தி லெழுந்தருளியிராநின்ற சதுர்முகபகவானிடத்திற்போய் நமஸ்காரஞ்செய்து வாரீர் பிரமதேவரே சிலருஷிகள் மோக்ஷத்தைக்கொடுக்கின்றவனாக என்னை நினைத்துத்தவஞ்செய்கின்றவர்கள் வேண்டியவர்களுக்கு முத்திதவிர மற்ற இஷ்டகாமியங்களைக் கொடாநின்ற நான் மோக்ஷத்தை எப்படிக் கொடுப்பேன் அதற்சொருபமாயத்தைச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தியாநின்ற ருத்திரபகவானைப் பார்த்து பிரமதேவர் சொல்லுகிறார்.

வாராய் சங்கரனே நீபோய்த்தவஞ்செய்வோருடைய வலதுகாதில் ராமதாரகமந்திரத்தை உபதேசித்தால் அவர்கள் யாவரும் முத்தியை யடைவார்கள் அதற்குச் சந்தேகமில்லையென்று உபதேசித்தனுப்பினர் அப்படியே சிவபெருமானனவர் அந்தருஷிகளுடைய வலச்செவியில் உபதேசிக்க அவர்கள் யாவரும் வைகுந்தத்தை அடைந்தனர்கள் இப்போதும் விஸ்வேஸ்வரராகிய சங்கரபகவானனவர் அவ்விடத்தில் வசிப்பவர்களுக்கு மரணத்தைச் சம்பவித்தபோது அவர்கள் வலக்காதில் சக்கரவர்த்தி திருமகனுடைய நாமத்தை மந்திரோபதேசம்பண்ணிப் பரமபதத்தை யடையச்செய்கின்றனர் ஆதலால் அந்த நகரமானது முத்திஸ்தலமாகச் சொல்லப்படுமென்று சொல்லிச் சந்தியாவளியானவள் மோகனுங்கியைப்பார்த்து வாராய் பிரமபுத்திரீ அரிபாத இருதயனும் ராக்ஷதியும் ராசகன்னிகையும் காசிநகரத்தைச் சேர்ந்தபிற்பாடு ராசகன்னிகையானவள் அந்த நகரராசனுக்குத்தான் வந்திருக்கிறசெய்தியை ஒருவர் மூலமாகத் தெரிவித்தனள் தன்குமாரத்திவந்திருக்கிற சமாச்சாரத்தை ராசன்கேட்டமாத்திரத்தில்இதென்ன ஆச்சரியம் நம்முடைய குமாரத்தியை ஒரு அரக்கன் நெடுநாள்களுக்கு முன்னமே கொண்டுபோயிருக்க இப்போது அவனிடத்திலிருந்து தப்பி எப்படி வந்தனளென்று மந்திரிமார்களோடு பேசிக்கொண்டு இரதத்தின்மேலேறிச் சத்திரத்தண்டையிற்போய்த் தன் புத்திரியைக் கண்டு எடுத்தணைத்துக்கொண்டு வினவத்தன்னை இராக்கதனனவன் எடுத்துக்கொண்டுபோன வரலாற்றையும் தானும் அரக்கிரிஞ் சேர்ந்து அந்த அரிபாத இருதயனல் அந்த அரக்கனைகொன்றுவிட்டுவந்த வரலாற்றையுஞ் சொல்லினள் உடனே குருநிலமன்னனுகிய அரிபாத இருதயனும் ராட்சதியையும் தன் புத்திரியையுந் தேரின்மேலேற்றிக்கொண்டு அரண்மனைக்கு வந்து நகரமெங்கும் அலங்கரித்து நல்ல சுபமுகூர்த்தகாலத்திலே தன் பெண்ணை அந்தராசபுத்திரனுக்குக்கொடுத்து விவாகத்தைமுடித்து அளவிறந்ததனத்தையும் ஆபரணங்களையும் சிலதேசங்களையும் தாசிதனங்களையும் சீதனமாகக்கொடுத்து அவனேடு அனுப்பினன் அந்தமூவரும் பட்டணம்வந்து சேர்ந்து என்புருஷன் என்னை அழைத்துவரும்படி ஓராளையனுப்பினன் அது கேட்டும் அவரிடத்திலே போவதற்கு வெட்கப்பட்டுப் போகாமலிருந்தேன் என்பிதாவானவர் சிலபுத்திகளைச்சொல்லி என்னைச்சிவிகையிலேற்றியனுப்ப நானும்போய்ச்சேர்ந்து சிலநாள் அவனேடு வாழ்ந்திருந்து மரணமடைந்தேன் பின்புநான் புருஷனேடு எதிர்த்துப் பேசி அவர்மனதுக்கு வருத்தம்வரும்படிச்செய்த பாபகர்மத்துக்குத் தக்க நானுவித நரகவேதனைகளையனுபவித்து இப்பொழுது புழுவாய்ச்சன்

மித்து என்பாபக் தொலேந்துவிட்டதென்று சொல்லிக்கொண்டே தன் பிராணனை விட்டது.

ஆகையால் நாயகனுடைய மனசுநோகாமல் நடக்கவேண்டியதன்றோ நம்முடைய கடமையென்று சந்தியாவளிசொல்ல அதற்குமோகனங்கியானவள் இவள் சொல்வதெல்லாம் யதார்த்தந்தான் நாம் அப்படிப் புருஷனுடைய மனம்நோகாமல் நடப்போமேயானல் பிரமதேவருடையகட்டளையை மீறினவ ளாகின்றோம் இதற்கென்ன செய்யலாம் எவ்விதத்திலும் ருக்மாங்கதமகாராஜன் ஏகாதசி விரதத்தைத் தவருகிறவனுகக் காணப்படவில்லை அவன் தேவிமார்களும் புத்திரனும் அவனைப்போலவே உறுதியாயிருக்கிறுர்கள் நாம் இனிச் சும்மா யிருக்கலாகாது தர்மாங்கதனுடைய தலையையாவது வெட்டித் தரச்சொல்லிப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று தனக்குள்ளே தீர்மானித்துக்கொண்டு சந்தியாவளியைப்பார்த்து மோகனங்கி சொல்லுகின்றுள்.

வாராய் சந்தியாவளி தேவி நீ சொல்வதெல்லாம் யதார்த்தமே இப்போது எனக்குக்கொடுத்திருந்த வரத்தை இன்றையத்தினம் பரிபாலனம் பண்ணக் கேட்டேனே யல்லாமல் அவர்மனம் நோகும்படி நானென்றுஞ் செய்யவுமில்லை பேசவுமில்லை அப்படி ஸ்ரீஹரி தினவிரதத்தை உண்மையாக ஆசரிப்பவராயிருந்தால் அதையறிவோம் அவர் என்னேடு கலவாமற் போனுலும் அவர் குமாரனுகிய தர்மாங்கதனுடைய தலையையாவது கொடுத்துத் தம்முடைய சொல்லைக்காப்பாற்றுவாரா இதையாவது அறிந்துவந்து சொல்லம்மா வென்று சொல்ல அதைக் கேட்டவுடனே நம்முடைய புத்திரநாசத்தைக்குறித்து நாம் எவ்வளவுந் துக்கிக்கப்போகாது நமது கணவனுக்குச் சத்தியவாக்கியென்றும் ஏகாதசி விரத பங்கஞ் செய்யாதவ ரென்றும் பெரியோர்கள் சொல்லுகின்ற புகழொன்றும் நாசத்தை யடையாம லிருந்தால் அதுவே போதுமென்று தனக்குள் ஆனந்தபரவசமுடையவளாய்த் தர்மாங்கதனை யழைத்துக்கொண்டு ருக்குமாங்கத மகாராசாவினிடத்திற் போய்ச் சேவித்துச் சொல்லுகின்றுள்.

வாராய் என்குலதெய்வமாகிய புருஷ சிரேஷ்டரே முற்காலத்திலே அரியவமிச மகாராசனுகிய சிபிசக்கிரவர்த்தியினுடைய அன்பைச் சோதிக்கும்படி அக்கினி பகவான் புரு வடிவங்கொண்டு அம்புபட்ட காயத்தோடு பறந்துபோய்ச் சக்கிரவர்த்தியி னுடைய மடியில் விழ அதை அவரெடுத்துக் காயத்தை ஆற்றிக்கொண் டிருக்குஞ் சமையத்தில் இந்திரபகவான் வேடனைப்போல் உருவமெடுத்து வில்லும் அம்பும் கையில் தாங்கிக்கொண்டு புருவை வெகு தூரத்திலிருந்து தூரத்தி வி

டாய் பட்டு வருகின்றவனைப் போலத் தேகமெங்கும் வேர்வையொ ழுக வாயின் வழியாக மூச்சுவிட்டு இளைப்போடு வோடிவந்து சக்கர வர்த்தியினுடைய சமுகஞ் சேர்ந்து வாரீர் உயிர்கள் யாவற்றையும் உம்முயிர்போல நினைத்துப் பரிபாலிக்கின்ற தயாசிலரே நான் அனேக காலம் இந்தப் புறுவுக்காகக் கண்ணிவைத்துக் காத்திருந்தேன் இன்று பகவத்சங்கல்பத்தினாலே என் அம்பினால் தைக்கப்பட்டுப் பறக்க மாட்டாமல் தம்மிடத்தில் வந்து சேர்ந்தது இது என்னுடைய நல்ல காலந்தான் நானோ வெகு பசியா யிருக்கிறேன் நீர் இந்தப் பட்சியை சீக்கிரத்தில் தயைசெய்வீரானால் அதைச்சுட்டுப் புசித்து என்பிரான னைக்காப்பாற்றிக்கொள்வேன் இல்லா விட்டால் இதோ உமக்கு முன் னேதானே என்பிராணன் நீங்கிவிடும்போ லிருக்கிறதென்று சொல் லுகின்றவேடனைப்பார்த்துச் சிபிசக்கிரவர்த்தி சொல்லுகிறார் வாருய் கிராதனே இந்தப் பட்சியை நான் விடமாட்டேன் உனக்கு வேண்டிய ஆகாரமும் தனமுங் கொடுக்கிறேன் பெற்றுக்கொள்ளென்றுசொல்ல அதற்கு அந்த வேடன் ஒத்துக்கொள்ளவில்லை இதன் அளவுக்குத்தக்க என்மாமிசத்தைத் தருகிறே னென்று சொன்னமாத்திரத்தில் அந்த வேடன் ஒத்துக்கொண்டான் உடனே தராசொன்று வரவழைத்து ஒருதட்டில் புறுவைத்து மற்றொரு தட்டில் தன் தேகத்தைச் சேதித்துவைக்கப் புறு இருக்கின்ற தட்டு கனமாகத்தாழ்ந்து நிற்க அதைச் சரிப்படுத்தும்படித் தன்னுடலின் சதை எல்லாவற்றையும் அறுத் தறுத்து வைக்கவுஞ் சமமாகாத போது அந்தத் தட்டில் தாமே குதித் தேறச்சரிப்பட்டது அப்போது வேடனைப்பார்த்து என்னை யெடுத்துக்கொண்டு போவென்று சொன்னவுடனே பிர்மருத்திராதி சமஸ்த தேவர்களும் தங்கள் தங்கள் தேவிமாருடனே வாகனமேறிப் புடைசூழ்ந்துவர சர்வேஸ்வரரானவர் வேத சொரூபியாகிய கருட பகவான் மேல் எழுந்தருளி அந்தச் சிபிசக்கிரவர்த்திக்குப் பிரசன்னராய் வந்து நிரதிசயானந்த பரமபதத்தைக் கொடுத் தருளினர்.

ஒரு காலத்தில் இந்திர னானவன் ததீசிருஷியி னிடத்திற் போய் எனக்கொருவரங் கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க அம் முனிவர் அப்படியே கொடுத்தோம் கேளென்றுசொல்ல அப்போது இந்திரனானவன் உம்முடைய முதுகெலும்பைக் கொடுப்பீரானால் நான் வச்சிராயுதஞ் செய்துக்கொள்வே னென்று சொன்னவுடனே அவர் இந்திரன் வேண்டியபடியே தமது தேகத்தை விட்டனர். மேலும் பகவானானவர் அசுரமோகனார்த்தமாகச் சிலதர்மநூல்களைச் செய்யென்று சங்கரனுக்குக் கட்டளையிட்டருளி உன்னைப் பரவஸ்துவாக அந்தவேதபாகியர்கள் எண்ணும்படி நானே உன்னைவந்து பூசிக்கிறேனெ

ன்று வரங்கொடுத்து ஸ்ரீராம கிருஷ்ணுதி அவதாரங்களைச் செய்த போது ஸ்ரீருத்திரபகவானைப் பூசித்து அந்த வரத்தைப் பாலனஞ்செய்தருளினர்.

ஆகையால் நீர் சத்திய வாக்கியந் தவருமல் அந்த மோகனங்கிக்குக் கொடுத்தவரத்தை விரதபங்கம் வரவொட்டாமல் பாலனஞ்செய்யவேண்டுமென்று பலவாகச் சொல்லி இப்போது அவள் நமது புத்திரனுகிய தர்மாங்கதனுடைய தலையை வெட்டித் தந்தால் சம்மதிப்பாள் ஸ்ரீஹரிவாசர உபவாசமும் கெடாதென்று சொன்னமாத்திரத்தில் ருக்குமாங்கத மகாராசனனவன் புத்திரவாற் சல்லியத்தினல் மெய்சோர்ந்து அந்தக்கரணங்க ளொடுங்கி யாதொரு செயலுமில்லாமல் உயிருண்டோ இல்லையோவென்று யாவருஞ் சந்தேகிக்கும்படி பூமியிற் கிடந்தனன் அதுகண்டு சந்தியாவளி தேவி முதலானவர்களும் சைத்தியோபாசாரங்களைச் செய்ய மூர்ச்சை தெளிந்து சமீபத்தி லிருக்கின்ற தர்மாங்கதனைப் பார்த்து வாராய் கண்மணி வாராய் எங்குலவிளக்கே வாராய் சந்திரவமிச திலகமே வாராய் என்னுயிர்க்குயிரே யென்றழைத்து மார்போடு சேரத்தழுவி என்னப்பனே தர்மாங்கதா இந்த வுலகத்திலே புத்திரன் வேண்டுமென எத்தனையோ பேர் அருந்தவங்களைச் செய்தார்கள் நாங்கள் அப்படிச் சிரமப்படாமல் ஸ்ரீபகவத் சங்கல்பத்தாலே எங்களுக்குப் புத்திரனுக ஜன்மித்தாய் உன்தாய்மார்க ளிடத்தில் நடந்து கொள்வதற்குப் பதின்மடங் கதிகமாய் அந்தப் பாதகியாகிய மோகனங்கியி னிடத்தில் பக்திசிரத்தையோடு நடந்துகொண்டுவருகின்ற உன் விஷயத்திலே தானே இந்தத் துன்மார்க்க நினைவு கொண்டாள் வரங்கொடுத்தவன் நானுச்சே என்னுடைய தலையைக் கேட்க வொண்ணுதோ எப்படி மனந்துணிந்து நாவு கூசாமல் சொன்னள் பரமபாகவதர்களாகிய மகாரிஷிகள் பிராமணுேத்தமர்கள்முதலிய பெரியோர்கள் விஷயத்திலும் மற்றவர்கள் விஷயத்திலும் ஒரு தீங்கான செயலை இதுவரையிலுஞ் செய்து மறியேன் நினைத்து மறியேன் எனக்கும் இப்படிப்பட்ட ஆபத்து சம்பவித்ததோ இதுவும் பகவத் சங்கல்பமேயொழிய வேறென்று மனவியாகூலப் படுகின்ற பிதாவைப்பார்த்துத் தர்மாங்கதன் சொல்லுகிருன்.

வாரீர் பிதாவே சாஸ்திரஞான சம்பன்னரே உலகத்திலே மூடஜனங்கள் தாங்கள்செய்த நல்வினை தீவினைக்குத் தக்கபடி ஜன்மத்தை

யெடுத்துத் தந்தையென்றும் தாயென்றும் பிள்ளையென்றும் ஒருவரையொருவர் தங்கள் அஞ்ஞானத்தாலே நினைத்துக்கொண்டு க்ஷணகாலமுந் தாங்கள் வாழ்வது இன்னவிதமென் றறியாமல் காமக்குரோதலோப மோகமதமாச்சரியங்களில் வசப்பட்டு ஜனனபரம்பரை விர்த்தியாகும்படிப் பாபகர்மங்களை மேலுமேலுஞ் செய்து பிராரத்துவ கர்மபலனை யனுபவித்து மரணமடைவார்கள் தத்துவஞானிகள் தேகனில்லையைச் செவ்வையாக அறிந்து மண்பெண் பொன் இவற்றின் ஆசைகளை விட்டொழிந்து சத்சங்கமாகிய பாகவதர்களை அநுசரித்து நித்தியாநித்திய விவேகம் பிறந்து ஸ்ரீஹரியி னுடைய குணானுபவத்திலும் கைங்கரியங்களிலுங் காலத்தைக் கழித்து ஸ்ரீபரம பதத்தை யடைவர்கள்.

இவையெல்லாவற்றையுந் தாம் செவ்வையாகப் பரிசிலனஞ் செய்பவர்களிருந்தும் அநித்தியமாகிய தேசசம்பந்த அபிமானததால் என்னைக்குறித்து இப்படித் தாபப்படுவது தகுதியாமோ என் சிறியதாயாகிய அந்தமோகனுங்கி கேட்டபடியே என்தலையைக் கொடுப்பீரேயானால் உமக்கு விரதபங்கம் வரவொட்டாமல் இருக்கின்ற என் சீவனும் ஸ்ரீவைகுந்தத்தை யடையும் உமக்கு விரதந்தக்கும் அவ் விரதத்தால் உமக்கும் சந்தியாவளி முதலிய தாய்மார்களுக்கும் காலமுடிவில் அந்த நித்தியலோகங்கிடையாமல் போகமாட்டாது மேலும் சத்தியவாக்கி என்னும்பெயர் உமக்கும் பதிவிரதையென்னும் பெயர் என்தாய்க்கும் சற்புத்திரனென்னும் பெயர் எனக்கும் இவ் வுலகத்திலே நெடுநாள் நிற்குமென்று சொல்லுகின்ற தர்மாங்கதனுடைய சொல்லால் மனந்தேறி மூவரும் ரோடி ஊர்த்துவ புண்டரங்களைத் தரித்து மந்திரராஜமாகிய திருவஷ்டா க்ஷரத்தைச் செபித்து நித்தியகடனை முடித்துக்கொண்டு வந்து பரிசுத்தஸ்தானத்திலே நின்று ஸ்ரீபகவத்நாமங்களை யுச்சரித்துக்கொண்டே சந்தியாவளிதேவி ஒருகையால் தர்மாங்கதனுடைய தலையையும் மற்றொரு கையால் அவனுடலையும் இறுகப் பிடித்துக்கொள்ள விதற்ப தேசாதிபதியாகிய ருக்குமாங்கத மகாராஜன் மிகவும் கூர்மையாகிய தன்னுடைய உடைவாளை யுயாவீசி வெட்ட உத்தேசித்தான் விதிசிவாதிசமஸ்த வேதசமுகங்கள் இந்த மகாராஜன் ஏகாதசி விரதத்தில் வைத்திருக்கும் பக்திசிரத்தையைக் காணும்படி ஆகாயவீதியிலிருந்து பார்த்துக்கொண் டிருந்தார்கள். ருக்குமா

ங்கதன் வாளைவீசுவதைக்கண்டு மோகனாங்கி எழுந்தோடிவந்து இந்தமகா ராஜனுடைய வலதுகையைப்பிடித்துக்கொண்டுசொல்லுகிறாள் வாரீர் சந்திரவம்சமகாராஜரே உமக்கும் இந்தச்சந்தியாவளிதேவிக்குமெனக்கும எவ்வளவு பயபக்தியோடுஉபகாரங்களைச்செய்துக்கொண்டுவந்தபுத்திரரத்தினத்தை வெட்டுவதற்கு உமக்குமபத்துமாதஞ்சுமந்து பெற்ற சந்தியாவளிதேவிக்கும் எப்படிமனந்துணிந்தது பிள்ளையைக்கொல்லுகின்ற கொலைபாதகர்களுக்கு மீளாநரகமுண்டாகுமென்று சாஸ்திரங்கள் சொல்லுமேயானால் ஸ்ரீஹரிபக்தனாகவும் சற்குண விவேகியாகவுமிருக்கின்ற புத்திரனைக் கொலைசெய்தவர்களுக்கு நரகமுண்டோ இல்லையோவென்று யோசிக்கவும் வேண்டுமோ தன்னுயிரைப்போல் மன்னுயிரைக்காப்பதன்றோ ராஜநீதிஅப்படியிருக்கச் சுயபுத்திரனிடமே எவ்வளவும் கருணையில்லாமல்கொல்லத் துணிந்தீரே இதுமகா ஆச்சரியகரமாயிருக்கின்றது தாங்களும் தங்கள் குலமும் நல்லகதி யடையவேணுமென்று எத்தனையோபேர் ஒருபுத்திரனைக்குறித்துத் தவஞ்செய்தனர்கள் புத்திரருக்குமேற் பட்ட விரதமுண்டோ என்ன ஆலோசனைசெய்து என்னகாரியத்தைச் செய்கிறீர் போதும் போதும் நிறுத்தும் இன்றென்னோடு கலந்து என்னிஷ்டத்தை நிறைவேற்றித் தர்மாங்கதனும் நீருஞ்சுகஜீவிகளாய் வாழ்ந்திருங்களென்று ருக்மாங்த மகாராஜனைப்பார்த்துச்சொல்லுகின்றமோகனாங்கியைச் சேவித்துப் புத்திரசிரேஷ்டனாகிய தர்மாங்கதன் சொல்லுகிறான்.

வாரீர் என்தாயே உம்முடைய சொல்லுக்குக் குறுக்குசொல்லுகிறேனென்று மனதிலாயாசம் வேண்டாம் குரோத புத்தியினால் பிள்ளையைக் கொலைசெய்தானானன்றோ பாதகம் சகல பாபங்களையும நிவர்த்திசெய்யாநின்ற ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசி விரதத்தைக் காத்துக்கொள்வதினிமித்தம் தன்புத்திரனைக் கொன்றால் பாபமுண்டோ அந்தக் கொலைக்கு நானே சம்மதித்தபோது பாபமென்பதேது சகலதர்மங்களையு மறிந்திருக்கிறதாயே நீசொல்லுவது தர்மமோ அதர்மமோ ஆலோசித்துப்பாருமென்று சொல்லிவிட்டுக் குனிந்து நின்றான்; குனிந்துநிற்கின்ற தர்மாங்கதனை அசையவொட்டாமல சந்தியாவளிதேவி இரண்டுகைகளாலும் முன்போலவே இறுகப்பிடித்தனள் ருக்மாங்கதமஹாராஜன் ஸ்ரீபரந்தாமனைத் தியானித்துக்கொண்டுவாளாயுதத்தை வீசிவெட்டினான்.

அந்தவெட்டானது தர்மாங்கதனுடைய கழுத்தில் புஷ்பமாலையைப்போல் விழுந்தது மறுபடியும் மஹாராஜனானவன் வாளைத்தி











ட்டிக்கொண்டு வெட்ட உயரவெடுத்தான் உடனே சர்வசுவாமியான வர் அசரீரியாய் வாராய ருக்மாங்கதா நீ எம்முடைய தினமாகிய ஏ காதசி அனுஷ்டிக்கும் விரதத்தை மிகவும் மெச்சினேம் பூலோகத்தி லே என்னிடத்தில் யதார்த்தபக்தியுள்ள தாசர்கள் உன்னைவிட வே றேயுண்டா முத்தி சாதனமாகிய இந்த விரதத்தைத் தாரபுத்திராதிக ள் அனுஷ்டிக்கும்படிச் செய்ததுமல்லாமல் சகலதேசங்களிலும் வி யாபிக்கச்செய்த பரமபாகவதோத்தமனே இதோமாணிக்கமயவிமா னம் வருகின்றது அதில் நீயும் சந்தியாவளியும் தர்மாங்கதனும் ஆ

ரோகணித்துக்கொண்டு பரமபதத்துக்கு வாருங்களென்று திரு வாய்மலர்ந்தருளினர் ஸ்ரீசர்வேஸ்வரரானவர் திருவாய்மலர்ந்தருளிய படியே அநேககோடி பாலசூரியர்கள் உதயமானதுபோலத் தகத்த காயமான விமானம் ஒன்றுவந்தது அப்போது சமஸ்ததேவர்களும் தேவதுந்துபி முழங்கிச்சுகந்த புஷ்பங்களைத்தூவ அதில் விதர்ப்பதே சராசனாகிய ருக்மாங்கத மகாராஜனும சந்தியாவளியும் தர்மாங்கதனு ம் எதிர்க்கொள்ள அக்கினிபகவானும், நக்ஷத்திரங்கள் வாரங்கள் மாத ங்கள் அயனங்கள் வருஷங்கள முதலாகிய காலதேவதைகளும் வாயு தேவனும் சூரியசந்திரர்களும வருணனும் இந்திரனும் சங்கரனும் பிர மனும் கைகளைக்கூப்பிக்கொண்டு வழிகாட்டச சமஸ்த அண்டங்களை யுங்கடந்து விரசாநதியிற்றோய்ந்து அமானவபுருஷனால பரிசிக்கப்ப ட்டு வாசனை நீங்கி நித்திய தேகத்தைப்பெற்று மீளாக்கதியாகிய வை குந்தத்தை யடைந்தனர்கள அந்த நகரத்திலும் மற்றதேசங்களிலுமு ள்ள சற்சனர்கள் யாவரும் ருக்குமாங்கதமகாராஜன் ஏகாதசிவிரதத்தி ல் வைத்திருந்த பக்தி சிறத்தையையும் மோகனாங்கி விஷயத்தில் செய் த சத்தியவாக்குப் பரிபாலனத்தையும நானாவிதமாகப் புகழ்ந்துக்கொ ண்டாடினார்கள் பிற்பாடு சந்தியவாளி தவிர மற்றத்தொண்ணூற்றொ ன்பது தேவிமார்களில் ஒருத்தியினுடைய புத்திரனாகிய தர்மநேயனெ ன்பவன் மகாரிஷிகளும் பிராமணோத்தமர்களும ஆசீர் வசனங்களைக் கூறிப்பட்டாபிஷேகம் அக்ஷதையுந் தூவப்பட்டங்கட்டிக்கொண்டு ஸ்ரீஹரிவாசர உபவாசத்தைத்தானும் அனுஷ்டித்துப் புரங்களும் மற் றத்தேசத்தார்களும் ஆச்சரியப்படும்படியாய மகுடவர்த்தனர்களும் கீழ்ப்படிந்து கப்பங்கட்டச்செங்கோலசெலுத்தி விதர்ப்பதேசத்தை ஆண்டுகொண்டுவந்தனன்,

வாராய் பூபாலகோத்தமனாகிய மாந்த்த மகாராஜனே அந்த மோ கனாங்கியானவள் ருக்குமாங்கதமகாராஜன் முதலிய மூவரும் திவ்யமா ணிக்க மய விமானத்தில் ஆரோகணஞ்செய்து நிரதிசயானந்த மூர்த்தி லோகத்துக்கெழுந்தருளிய மாத்திரத்தில அதுகண்டு அதிக ஆச்சரி யத்தையடைந்து வெண்ணெய் திரளுகிற சமையத்தில தாழியுடைந் தாற்போல நம்முடைய பிரயத்தினமெல்லாம் வீணாய்முடிந்ததுநாமொ ன்று நினைக்கத்தெய்வமொன்று நினைத்ததே இனிநாமென்ன செய்யப் போகிறோமென்று ஒன்றுந்தோன்றாமல் சற்றே பிரமித்துப் பின்புத ன்னைத்தானே திடப்படுத்திக்கொண்டு தன்மனதைத்தேற்றித் தனக்கு ள்ளே தானே எண்ணுகிறாள் சதுமுகனானவர் நம்மைநோக்கி நீபோய் ருக்குமாங்கதமகாராஜனுடைய ஏகாதசிவிரதத்தையாவது பங்கஞ்செ

ய் அல்லது அவன் புத்திரனாகிய தர்மாங்கதனுடைய தலையையாவது கொண்டுவாவென்று கட்டளையிடவும் நம்முடைய அஞ்ஞானத்தாலே முன்பின் ஆலோசிக்காமல் அப்படியேசெய்து வருகிறேமென்று ஒத்துக்கொண்டு வந்தோமே அவற்றிலொன்றையாவது நிறைவேறாமல் அபலமாய்ச் சத்தியலோகத்தில் சென்று ருத்திரேந்திராதி சமஸ்ததேவ சமூகங்களும் நிறைந்திருக்கின்ற சபைக்கெதிரே நாணமில்லாமல் பிரமதேவரிடத்தில் நீர் சொன்னவற்றில் ஒன்றும் என்னால் முடியவில்லையென்று எப்படிச்சொல்லுகின்றது சர்வநியந்தாவாயும் விபுவாயும் விளங்காநின்ற ஸ்ரீபரந்தாமனானவர் சகலாத்மகோடிகளுடைய உஜ்ஜீவனார்த்தமாக ஆதிகாலத்தில் பதரிகாச்சிரமத்தில் நரநாராயணர்களாகத் திருவவதரித்து ஆசாரிசிஷ்யக்கிரமத்தை காட்டியருளவேண்டித் தாம் ஆசரித்தவத்தை விக்கினஞ்செய்ய உத்தேசித்துவந்த மன்மதனை மயக்கும்படி ஊர்வசியைச் சிருஷ்டித்தனுப்ப அவள்சென்று பிபீலிகாதி பிர்ம ரியந்தமாகிய பிராணகோடிகளை மோகிக்கச்செய்கின்ற அநதக்காமதேவனானவன் உத்தேசித்து அந்த எண்ணம் சிறிதும் பயன்படவொட்டாமல் அவனைத்தன்மையலிற் சிக்கச்செய்யவில்லையா ஒருகாலத்தில் விசுவாமித்திரரானவர் மகத்தாகிய தபத்தைச் செய்வதைநோக்கி இந்திரனவான் அதை யழிக்கும்படி மேனகையையேவ அவள்போய் அவர்தவத்தைக் கெடுக்கவில்லையா இப்படிச் செய்தவர்களநேகருண்டு நாமொருத்திதானே நினைத்து வந்தகாரியம் சிறிதும் பலிக்காமல் நிஷ்பலத்தை யடைந்தோம் அல்லது ருக்குமாங்கத மகாராஜன் சென்றவிடத்துக்குச்சென்று நாம்யத்தனித்து வந்தகாரியத்தை முடித்துக்கொள்வோமென்றால் அவ்விடம் ஸ்ரீவேத புருஷனுக்கும் அஜசங்கிருதிகளுக்கும் மனோவாக்குக் கெட்டாததாயும் சகலாண்டங்களுக்கும் மேலாயும விளங்காநின்ற முக்திவுலகமாச்சே அங்கே செல்வதுமகா அசக்தையாகிய நம்முடைய தரமோ இதிருக்கட்டுமே தன்புருஷனுடைய கருத்துக்கிசைந்து நடவாமல் அவனிஷ்டத்துக்கு மாறுகி எதிர்த்துப்பேசுகின்ற அதமஸ்திரீக்கு நரகமுண்டோ இல்லையோவென்று சந்தேகிக்கவேண்டுவதில்லையென்று பெரியோர்கள் சொல்லுவார்களன்றோ நமக்கு அத்தியந்தம் பிரியனாகவும் விவாகமணவாளனாகவும் சத்தியவிரதசீலனாகவும் இருந்த அந்த ருக்குமாங்கத மகாராஜனுக்கு இஷ்டமாய் நடவாமல் அவன் சொல்லுக்கு எதிர்த்துப்பேசினேன் இதனால் என்ன பாபஞ்சித்திக்குமோ தெரியவராது ஸ்ரீசர்வேஸ்வரருடைய விஷ்ணுபதில் அபசாரப்பட்டவர்களுக்கு ஒருகாலத்திலும் உஜ்ஜீவனமுமுண்டாகலாம் அவனுடைய அடியார்களாகிய பாகவதரிடத்தில் அபசாரப்பட்ட

வர்களுக்கு ஒருகாலத்திலும் உஜ்ஜீவன முண்டாகாதென்றும் மோக்ஷ சாதனமாயும்பாமவைதீகவிரதமாயுமிராநின்ற ஏகாதசிவிரதத்தை அநு ஷ்டிக்கின்ற உத்தமபுருஷனை அன்றையதினத்தில் போஜனஞ் செய்யு மென்று பலாத்காரஞ்செய்யும் அதமனுக்கு நரகவேதனை சித்திக் காமற் போகமாட்டாதென்றும் இதிகாசபுராண ஆகமங்கள கூறுகின் றன நாமோ அந்தப்பிர்ம தேவனுடைய கட்டளையைப் பரிபாலனம் பண்ண வேணடுமென்கிற புத்தியீனத்தாலே பரமபாகவ தோத்தம னாக விளங்காநின்ற அந்தமகாராஜனை ஏகாதசி விரதப்பங்கப்படும்ப டி நம்மோடு கலந்து இஷ்டபோகங்களைச் செய்யும்படிச் சொன்னோ மே இதற்காக என்ன நகரவேதனை யனுபவிக்கும்படி நேரிடுமோ ஐயோநாமொன்று அறியோமென்று இப்படிநானாவிதமாகக் கிலேசப் பட்டுக் கொண்டிருக்கின்ற மோகனாங்கியைப் பார்த்துப் புரஜனங்க ள் கூட்டங் கூட்டமாகவந்து புருஷர்களும் ஸ்திரீகளும் ஒருவர்க் கொருவர் தனக்குள்ளே பேசிக்கொள்ளுகிறார்கள,

சிலபுருஷர்கள் வாராய்சினேகரே இந்த மோகனாங்கி தேவியி னுடைய ரூபலாவண்ணிய குணாதிசயங்களைக்குறித்து ஆலோசித்து ப்பார்க்குமிடத்தில் பிரமதேவருடைய புத்திரியென்பதற்குச் சந்தே கமில்லை யென்றார் சிலர் வாரீர் தோழரே புண்ணியபுருஷ சிகாமணி யாயும் ஏகாதசி விரதயோக நிஷ்டராயுமிருந்த ருக்குமாங்கத மகாரா ஜனைத் தான்முன் ஜெனனத்திலே செய்ததபோ பலத்தால் தனக்குப் பர்த்தா வாகக்கிடைக்கப் பெற்றிருந்தும் அந்தமகா ராஜனுடைய பா தங்களுக்குத் திருத்தொண்டு செய்து நிரதிசயானந்த முத்தியுலகத் தைப் பெற விரும்பாமல் ஸ்ரீஹரிதினவிரதம் பின்னமாகும்படி அல் பசுகத்தை விரும்பியது என்ன அவிவேகமென்றார் சிலர்வாரீர் பாங் கரே நமது மகாராஜனுடைய வைதீக விரதத்தை அழிக்க நினைத்த இந்தமகாபாத கியைச் சின்னபின்னமாக நம்முடைய அர்த்தசந்திரவா ளாயுதத்திற்கு இரையாக்காமல் சும்மாய்விட்டால்நாம் நமமகாராஜனி டத்தில் அன்புடையவர்க ளாவோமோவென்றார் சிலர்வாரீர் துணைவ ரே ஸ்திரீ ஹத்திமகா பாதகமென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்ற மையால் விரததினமாகிய இன்றைத் தினத்திலே நம்முடைய மகா ராஜனுககுப் பத்தினியாகிய இவளைகொலைசெய்து மகாபாதகத்தைச் சம்பாதித்துக் கொள்வதென்றார் சில ஸ்திரீகள் வாரீர் சகிமாரே இ வளபிர்ம புத்திரியாயிருப்பது யதார்த்தமா யிருந்தால் தன்னுடை ய புருஷனைத் தெய்வமாகப் பாவித்து அவன் இஷ்டப்படி நடந்து

இன்றுவைதிக விரதத்தையும் ஆசரித்து நித்தியானந்த சுகத்தைய
டையக்கோராமல் அந்தவிரதவிக்கினஞ்செய்து அன்பசுகாநந்தத்தை
இச்சிப்பாளோ இச்சிக்காள் ஆகையால் இவளாரோ மாயப்பெண்ணா
கத்தோற்றுகிறாளென்றார் சிலர்வாரீர் தோழிமாரே இவள் இதற்கு
முன்னெல்லாம் நம்முடைய மகாராஜனோடு ஸ்ரீவாசர உபவாசத்
தை அநுஷ்டித்துக்கொண்டு வந்தவர்க்குச் சந்தேகமில்லையன்றோ அ
ப்படியிருக்க இவளுக்கேன் ஸ்ரீவைகுந்தம் கிடையாமற் போச்சென்
று சிலர் அதுகேட்டு வாரீர் பாங்கிமாரே இவள் ஏகாதசி விரதத்தைத்
தானும் அனுஷ்டிக்காமல் மகாராஜனுடைய விரதத்தைப்பழுதுசெய
ய நினைத்தகொடிய பாதகத்தால் நரகசித்தியே யல்லாமல் வேறே எ
ன்னபிராப்தமாகப் போகின்றதென்றார்.

இந்தப்பிரகாரம் அந்நகரத்துப் புருஷர்களும ஸ்திரிகளுந்தந்
தன் தங்களுக்குத் தோற்றியபடி பேசிக்கொள்வதை அந்தமோகனா
ங்கியானவள் கேட்டுமிகவும் இலச்சையும் தான்செய்த அக்கிரமத்தி
னிமித்தம் கொல்வார்களென்கிற பயமும்உடையவளாய் இனிஇவ்வி
டத்திலிருப்பது நமக்குயோக்கியமன்று சீக்கிரத்தில் புறப்பட்டுப்பிர
மலோகத்தை உடையவேண்டுமென்று கருதிப்புறப்பட்டுச் செல்லுகி
ன்ற மோகனாங்கியை ருக்குமாங்கதனுடையகனிஷ்டபுத்திரனாகிய த
ர்மநேயனென்பவன் ஓடிவந்து சாஷ்டாங்க மாகத்தண்டம் சமர்ப்பி
த்து வாரீர்தாயே மகாராஜனில்லாமையால் இங்கே இனிநமக்கென்
ன விருக்கின்றது நம்மை உபசாரங்களைச்செய்து சமரட்சணம செய்
கின்றவர்கள் யாரிருக்கிறார்களென்று நினைத்தோ நீர்போகத்துணிவு
கொண்டது தர்ம்மநேயனென்கிற ஒரு புத்திரன் நமக்கிருக்கும்போ
து என்னகுறைவு நேரிடுமென்று தம்முடையதிருவுளத்திலே நினையா
ததற்குக்காரணம் யாதோ அல்லது தம்முடையவிஷயத்தில் அடியே
ன் ஏதேனுந்தீங்கு செய்ததுண்டோ வாரீர்மாதாவே என்னுடைய பி
தாவுக்குந் தாய்க்கும் பதிலாகத்தாமிருந்து இந்தச்சிறியனாகிய என
க்குவேண்டிய தர்மநீதிகளைச் சொல்லிக்கொண்டு அடியேனைக்காப்பா
ற்றலாகாதோ தம்முடைய புத்திரனாகிய என்னை அந்நியமாய் நினைத்
துக்கைவிட்டுப் போகலாமோ ருக்குமாங்கத மகாராஜனுடைய சம்ப
த்தெல்லாம தம்முடைய சம்பத்தே நாங்களெல்லோ நம தம்முடை
ய ஏவலாளர்களேயல்லது வேறல்ல இதற்குத்தாம எவ்வளவும் சந்
தேகிக்கவேண்டாமென்று கைகளைக் கூப்பிக்கொண்டு சொல்லுகின்
ற தர்மநேயனைப்பார்த்து மோகனாங்கிசொல்லுகின்றாள்.

வாராய் பரமவைதிகநிஷ்ட சத்தியகுணசீலனுடைய புத்திரனுகி ய தர்மசேபா உன் பிதாவாகிய ருக்குமாங்கத மகாராஜனையும் தா யாகிய சந்தியாவளி தேவியையும் தராதரவாகிய தர்மாங்கதனையும் உங்களையும் விட்டுப்பிரியும்படித் துராகதஞ்செய்த மகாபாதகியை நீ தாயாரென்று உன்னுடைய திருவாக்கு கூசாமல் யென்னை அழை க்கவும் உனக்கு மனம் வந்ததோ என்னப்பனே கஜஜன பூஷணமே ஸ்ரீ அரிவாசா உபவாசாவிரதிகளுக்கு ஸ்ரீசர்வேஸ்வருடைய கடாட்ச வீட்சணத்தால் யாதொருதீங்கும் நேரிடாது பிரமசங்கராதி தேவர் கள் ஒரு சங்கடத்தைச்செய்ய நினைத்தபோதிலும் அந்தச்சங்கடமா னது ஸ்ரீ கமலலோசனருடைய கருணை இலேசமாத்திரத்தால சூரி யோதயத்தைக்கண்ட பனிக்கூட்டம்போல் நீங்கிவிடும் நீங்கள யாவ ரும ஸ்ரீபகவானுடைய உபயராரர விந்தங்களில் அத்தியந்தம் பிரி தியுடையவர்களாய் ஏகாதசி விரதத்தை யநுஷடிக்கிரீர்கள் அப்படி ப்பட்ட பரிசுத்தவிரத நிஷடர்களாகிய உங்களுக்கும் ஒருதீங்குநேரி ட்டு வருத்தப் படுத்துமா இருப்புத்தூணையுஞ் செல்லரிக்குமா கே ளாய் சந்திரகுலபூமானே நீங்கள் யாவரும் ஸ்ரீமுகுந்தருடைய கடா க்ஷத்தைப் பெற்றவர்களென்று மூடமதியாகிய நான் இவ்வளவுவிஸ் திரித்துச் சொல்வானேன் இப்போது உன்பிதாவிஷயத்தில் நடந்த அற்புதமொன்றே போதுமானதன்றோ எமதர்மராஜனனவன் ஸ்ரீக யிலாயத்தில் பரமசிவனைவணங்கிவாருய ஸ்ரீருத்திரபகவானே பூலோ கத்தில் ருக்குமாங்கத மகாராஜ னென்பவன் ஸ்ரீ அரிதின உபவாசத் தை தானும் அநுஷ்டித்துத்தன் குடையின்கீழுள்ள சகலதேசத்து ஜனங்களும் ஆசரிக்கச்செய்து நரகங்களைப் பாழாக்கினனென்று மு றையிட அதுகேட்டு அந்தச்சம்புமூர்த்தி யிருதயிபுதேவனை அழைத் துக்கொண்டு மகம்வேருவி யெழுந்தருளியிராநின்ற சதுமுகனிடத் திற் போய் வணங்கிச்சொல்ல அந்தப்பிர் மாவானவர் என்னைச்சிருஷ டித்து நீபோய் ருக்குமாங்கத மகாராஜனுடைய ஏகாதசி விரதத்தை ப் பங்கஞ்செய் அதற்கு அவனிசையாவிட்டால் அவன்புத்திரனுடை ய தலையைவெட்டித்தரச் சொல்லிக்கேளென்று என்னை யனுப்பினர் அவர் சொல்லைப் பரிபாலனஞ் செய்வதினிமித்தம் பதினன்குவருஷகா லமாய்ச் சமயம் பார்த்திருந்து இன்றைய தினம் என்னுடைய கரு த்தை நிறைவேற்ற யத்தனித்து மகாபாதகங்களைக் சம்பாதித்துக் கொண்டேன் அக்கொடியபாபத்தை நீக்கிக்கொள்ளும உபாயத்தை ப் பிர்மதேவரிடத்திற்சென்று கேட்டுக்கொள்ளப் போகிறேன் ஆகை யால் நீ என்னை ஆடங்கப்படுத்த வேண்டாமென்று தர்மநேயனிடத் தில் செலவுபெற்றுக்கொண்டு விதாப்பதேசத்தின் ராஜவீதியில்மோ

கனாங்கியானவள் போகாநிற்கையில் அங்கங்குள்ள சற்சனர்கள் யா
வரும் அவளைக்கண்டு ஏகாதசிவிரதத்தை யழிக்கநினைத்த சண்டாள
ஸ்திரி வருகின்றாள் அவள் முகத்தில் விழித்தாலும் நமக்கு அந்தப்
பாதகஞ் சுற்றிக்கொள்ளுமென்று நிந்தித்து எங்குஞ் சேரவொட்டா
மல் துரத்தினார்கள் அங்கிருந்து வாயுவேகமும் பின்னிடும்படியோ
டக்காட்டுவழியே செல்லுகையில் அவ்வாரண்ணியத்தில் வாசஞ்செ
ய்கின்ற யோகீஸ்வரர்களும் இத்துன்மார்க்க ஸ்திரியைத் தரிசன
ஞ்செய்த மாத்திரத்தாலே பாபஞ்சம்பவிக்குமென்று திக்கு திக்குக
ளிலோடி மலைக் குகைகளிலும் பெருமரத்து வாரங்களிலும் ஒளித்து
க்கொண்டார்கள் இதுகளையெல்லாங்கண்டு அதிக்கிலேசத்தோடு வி
ரைந்து போகும்போது வேடர்கள் இவளைப்பார்த்துக் கிஞ்சித்தாயி
னும் கருணையில்லாமல் இவளுடைய வஸ்திராபரணங்களைக் கொள்
ளையிடவும் ஆலிங்கனாதிகள் செய்யவும் நினைத்துக் கிட்டிவந்தனர்கள
உடனே மோகனாங்கிப்பயந்து ககனமார்க்கத்திலே யெழும்பி பிரம
தேவருடைய இருப்பிடத்துக்குச் சென்று தண்டாகார மாகப்பிரணா
மஞ்செய்துவாரீர் சிருஷ்டிக் கர்த்தாவே உம்முடைய வாக்கின்படிப்
போய்ப் பாகவதோத்தமனாகிய ருக்குமாங்கதமகாராஜன் விஷயத்தி
ல செய்த அபசாரமும் ஏகாதசி விரதத்தையழிக்கநினைத்த மகாபாத
கமும் ஆகிய இரண்டையுஞ் சம்பாதித்துக்கொண்டு வந்தேனே யல
லாமல் வேறொருலாபத்தையும் பெறவில்லையென்று முறையிட்டுத்து
க்கித்துக் கொண்டிருக்குஞ் சமயத்தில் பாசமுந்தண்டமுங் கையில்
தாங்கிக்கொண்டு யமன்வந்து வாராய் மோகனாங்கி எனக்கு இதஞ்
செய்யும் பொருட்டு ருக்குமாங்கத மகாராஜனிடத்தில் சென்றவளா
யிருப்பினும் நீ அங்குபோய்ச்செய்த பாபத்துக்காகக் கொடிய நரக
வேதனைகளை யனுபவிக்கவேண்டும் நாங்கள் யாவரும் ஸ்ரீசர்வேஸ்வ
ரருடைய கட்டளையைச் சிரசாக வைத்துக் கொண்டு நடக்கிறவர்க
ளேயொழிய ஒருவர்பாபத்தை மன்னித்துவிடச் சுதந்தரதார்களன்று
ஆகையால் நரகத்துக்கு வரவேண்டுமென்றுசொல்லிப் பாசத்தாலி
றுகிக்கட்டித்தன்புரிக்குக் கொண்டுபோய் நரகங்களில் தள்ளிவிட்
டனன் அந்நரகங்களில் வசிக்கின்ற பாபிஷ்டர்கள இவளைக் கண்டு
பேசுகின்றார்கள நாம ஒருவன்செய்த நன்றியை மறத்தலும் பரதா
ரகமனஞ்செய்தலும் அடைக்கலமென்று நம்பிவைத்தவருடைய பொ
ருள்களை யபகரித்தலும் பெரியோர்களை நிந்தித்தலும் முதலியபாப
ங்களில் சிலவற்றைச் செய்தவர்களாயும் பலவற்றைச் செய்தவர்களா
யுமிருந்து அவற்றிற்குத்தக்க வேதனைகளைப் படுகின்றோம இந்தக்

கொடியபாவிதனக்கு நாயகனுகவும் பரமபாகவதனுகமிருந்த ருக்கு மாங்கதமகாராஜனுடைய சொல்லுக்கு மாறுகம்பேசி அபசாரத்தைப் பெற்றுக்கொண்டது மல்லாமல் அம்மகாராஜன் ஆசரிக்கின்ற ஏகாதசிவிரதத்தைக் கெடுப்பதற்கு நினைத்துமகாபாபமுஞ் செய்திருக்கின்றுள் இவளுக்குச் சமீபத்திலிருக்கலாகாது துஷ்டசகவாசத்தாலும்பாபமநேரிடுகிற துண்டன்றோ ஆதலால் இவளை நெருங்கலாகாதென நூரத்திலொதுங்கிநின்றூர் அந்நரகவாசிகள் தன்னைவிட்டு நீங்கிப்போகிறதைப்பார்த்து இவர்கள் அருவருக்கும்படியாகிய பாவியாயிருக்கிறேமென்று மனேசஞ்சலத்தோடு நரகவேதனையை வெகுகாலம் அனுபவித்துப்பின்பு பரமலோகத்தையடைந்து வாரீர்சதுர்முகரேநான்செய்த மகாபாதகத்துக்குத்தக்கநாகங்களையும் அனுபவித்தார்கள்இனி எனக்கென்னகதியென்று வணங்கிக்கேட்டுக்கொண் டிருந்தனள்.

இவள்இங்கேயிப்படியிருக்கருக்குமாங்கதமகாராசன் விதம்பதேசத்தை ஆண்டுக்கொண்டிருக்குங்காலத்திலே தவத்திற்குச்சென்ற ஒருபிராமணோத்தமரானவர் வெகுநாள்களுக்குப்பின்தம்முடைய தவத்தை நிறைவேற்றிக்கொண்டு ருக்குமாங்கதமகாராசன் ஸ்ரீவைஷ்ணவவைதீக நிஷ்டனன்றே அவனைமுதலிலே போய்காணுவோமென்று அதிகுதூகலத்தையுடையவராய் வந்து ருக்குமாங்கதமகாராசனுடையசெய்திகளையெல்லாந் தர்மநேயனுல் கேள்விப்பட்டு ஸ்ரீஹரிதினஉபவாசத்தை விக்கினஞ் செய்ய யத்தனித்த மோகனங்கியைஇதோசாம்பலாய்ப்போகும்படிச் சபிக்கிறேனென்று சாபமிட்டனர் இதையறிந்துபிரமன்முதலான தேவர்கள்வந்து அந்தப் பிரமானரைப் பார்த்து வாரீர் யோகீஸ்வரரே அந்தமோகனங்கியானவள் எம்முடையசொல்லைக்கேட்டு அச்சொல்லின்படி நடத்தவேண்டுமென்னும் எண்ணத்தினுல் விரதாரசாரகிய ஏகாதசிவிரதத்தை விக்கினஞ்செய்ய யத்தனித்தாளேயல்லாமல் அவளுடைய மனப்பூர்வமாய் அக்காரியத்தில் பிரவேசித்தவளல்லள் அப்படியிருந்தபோதிலும் அதற்காகநாகதுன்பங்களையும்அனுபவித்து விட்டுவர்தாள் ஆதலால்அவன்மீதுகருணைகூர்ந்து காப்பாற்றுமென்று வேண்டிக்கொள்ள அத்தேவர்களுடையவேண்டுகையை அங்கீகரித்து அப்பிராமணோத்தமர் சொல்லுகிறூர்வாருங்கோள தேவர்களே நானிட்டசாபமோ வியர்த்தமாய்ப்போகாது ஆயினும் அந்தபபாத்தியினுடைய தேகம் நாசத்தையடையாமல் உடப்புமுழுமையும்சாம்பல் தோற்றமாகக்கடவதென்று அனுக்கிரகித்தனர் உடனே மோகனங்கிக்கு ரூபசௌந்தரியங்கள் நீங்கிவெண்குஷ்டவியாதியைப்போல் உடல்வெளுத்துவிட்டது தேவர்களெல்லோரும்பிராமணோத்தமரை நீங்கிபோனபின்பு மோகனங்கியானவள் பிரமதேவரைப்பார்த்து உம்முடைய சொல்லைக்கேட்டு நடந்ததினுலேசுவர்க்கமத்திபாதாளலோகத்தார்களும் என்னையெங்குஞ்சேரவொட்டாமல் சீசி வென்று தூத்தும்படியான மகாபாதகத்தைச் சம்பாதித்துக்கொண்டே

ன் நரகங்களையும் அனுபவித்துச்சாபத்தையும்பெற்றேன்எனக்குஏதேனும் ஒருதிவ்யவரத்தைக்கொடுக்கலாகாதாவென்று அதிக துக்காக்கிரந்தையாய்ச் சொல்லுகிறான்.

வாரீர்பிரமதேவருத்திரேந்திராதிதேவர்களே நீங்கள்யாவரும் அனுஷ்டிக்கின்ற சதுர்வித புருஷார்த்தசாதனமாகியஏகாதசியினிமித்தமே நான்பிறந்தவனாகையால் தசமிதிதிஒருநாழிகைஅரைநாழிகைகால்நாழிகைகலந்த ஏகாதசி விரதபலத்தையும் அப்படிப்பட்ட துவாதசிபலத்தையும் தயைசெய்வீர்களானால் நரகவேதனைகள் யனுபவித்துக்கிராகுமகாபாதகத்தைத் தொலைத்துச்சுகப்படுவேனென்றுகேட்க அதற்குதேவர்கள் அந்தப்பலனைமுன்னமே ஒருபிரமராக்ஷதக்குக்கொடுத்திருக்கிறோமென்றுசொல்ல அதுகேட்டு மோகனுங்கிசொல்லுகின்றான் வாருங்கோள்தேவர்களேருக்குமாங்கதமகாராசனுடையஏகாதசிவிரதத்திற்கு விக்கினஞ்செய்யப்போய் நான் சம்பாதித்துக்கொண்ட குரூரமானபாபத்தினாலன்றோ நரகத்திலிருப்பவர்களும் என்னைக்கொடியபாவியென்றுவிட்டுத் தூரமாகவிலக்கினார்கள்.

அப்படிப்பட்ட பாவந்தீரும்வகைவேறே இன்னமொன்றிருக்கின்றது அதென்னவென்றால்சூரியோதயத்துக்குமுன்னமேகோபாலர்கள பசுக்களைமேயப்புலத்துக்கு ஓட்டிச்செல்லுகிற நேரத்தில் தசமிஐம்பத்தைந்து நாழிகைவரையுமிருக்கமறுநாள் ஏகாதசிவிரதம் ஆசரிக்கின்றபலனையும்அதற்குமறுநாளதுவாதசிபலனையும்அடியேனுக்குக்கொடுத்தருளுமென்று சாஷ்டாங்கமாகவிழுந்து சேவித்தனன் அப்போது சகலதேவர்களும்மனமிரங்கி அப்படியேதந்தோமென்று வரங்கொடுத்தனர்கள்யமனவர் என்னுடையநகரத்தில் பாழ்பட்டுக்கிடக்கின்ற நரகங்களைவிர்த்திசெய்து என்அபீஷ்டத்தை நிறைவேற்றவெகு இடுக்கண்களையனுபவித்த மோகனுங்கியே மேற்சொன்ன ஏகாதசிதுவாதசிபலனைப்பெற்றுக்கொண்டுசுகசீவியாய் வாழக்கடவாயென் வாழ்த்தி தத்தமதுபுரிக்குச்சென்றனர்ஸ்ரீருத்திரபகவான் முதலியசமஸ்ததேவர்களும் மேருமலையில் நின்றுமதங்கள்தங்கள் இருப்பிடத்துக்குச்சென்றார்கள மோகனுங்கியானவள் தான் வரம்பெற்றுக்கொண்ட தசமிவேதையுள்ள ஏகாதசியிலும் ஏகாதசிவேதையுள்ள துவாதசியிலும் வசித்துக்கொண்டு அந்தவிரதங்களை ஆசரிக்கும்பலன்களைத் தந்தேயனுபவித்துவருகின்றனள்.

வாராய்மகுதசமகாராசனேமேற்சொல்லியதசவேதையில்லாதஸ்ரீஹரிதின உபவாசத்தை ஆசரித்து அந்தமுறையே துவாதசிகால்நாழிகைக்குக்குறையாமல் ஒருநாழிகைவரையும்சேஷமிருந்தால் போதும அந்ததினை ஏகாதசியிலேசேஷ துவாதசியில்பாரணைசெய்யலாம தசமி ஏகாதசி துவாதசி இந்தமூன்றுதினங்களும்ஸ்ரீசங்கமத்தையும்தாம்பூலமுதலிய காமியவஸ்துக்களையும அவற்றில்முதல்நாள்ஒருவேளைப்போசனமும இரண்டாநாள் இரண்டுவேளைப்போசனமும மூன்றுநாள் ஒரு வேளைப் போசனமும் ஆக நான்கு வேளைப் போசனங்களையுமநீக்கி ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டே ஏகாதசி

முழுமையுந் துவாதசிப்பகலிலும் நித்திரை யில்லாமலிருந்து ஸ்ரீஹரி வாசம் ஸ்ரீஹரிதினம பரமவைதீக விரதராசமென்று சொல்லப்படும ஏகாதசிவிரதத்தை ஆசரிப்பவர்கள் இம்மையில்தர்மார்த்தகாமங்களைத்தாங்கள்வேண்டியபடியே யடைந்துகொண்ட பெண்டீர்மக்களோடு சுகசீவிகளாகிய நெடுநாள்வாழ்ந்து முடிவிலேமுடிவில்லாதநித்தியானந்தமயமாகிய ஸ்ரீவாமபதத்தைப்பெறுவார்கள் இந்தவைதீக விரதத்தைச் சதுர்வர்ணத்தார்களில் எட்டுவயதுக்கு மேற்பட்டயாவரும் ஆசரிக்கலாம் அநுஷ்டிப்பவர்களில கர்ப்பிணியானவள் பக்கசமானவத்தன்னிச்சையின்படிப் புசிக்கலாம துக்த்தையாயிருப்பினும் அநுஷடிக்கலாம் வியாதிமஸ்தர்கள் இந்தப்பரமவைதீக விரதராஜத்தைத்தங்களால் ஆசரிக்கமுடியாமற்போயினும் தமமுடையபந்துக்களில் யாரையேனுந் தங்கள்நிமித்தம ஆசரிக்கும்படிவைக்கலாம் இப்போதுஉனக்குச் சொல்லிக்கொண்டுவந்த ஸ்ரீருக்குமாங்கத ஏகாதசிசரித்திரத்தைச் சிரத்தையோடு படிப்பவர்களும அந்நியசிந்தையில்லாமல்கேட்பவர்களும ஸ்ரீசர்வேஸ்வராகிய ஸ்ரீகிருஷ்ணகடாட்சத்தினால இகலோகபரலோகசௌகியங்களை அநுபவித்துத்தீர்க்காயுசைப் பெற்றுவாழ்வார்களென்று ஆசீர்வசனம்பண்ணி வசிஷ்டமஹாமுனிவர் மருத்தமகாராசனுக்குச் சொல்லியருளினர்.

ருக்குமாங்கத ஏகாதசி சரித்திரம்-முற்றிற்று.

ஸ்ரீருக்குமாங்கதன் திருவடிகளே சரணம்.







ஸ்ரீ

ஸ்ரீ ராங்குசாயநமா.

# அம்பரீஷ துவாதசி சரித்திரம்,

ஸ்ரீசர்வேஸ்வருடைய திருவுந்தியிலவதரித்த சதுர்முகனவர் தருப்பைப்புல்லைச் சக்கராகாரமாகச்செய்து அதனைச்செலுத்த அது சென்ற இடமாதலால் நைமிசாரணிய மென்று சொல்லப்படும் வனத்தில் சௌனகர்முதலாகிய ரிஷிகள் ஸ்ரீபரந்தாமருடையசகஸ்திரநாமங்களை யுச்சரித்துக் சத்திரயாகஞ்செய்தார்கள் அந்தச்சமயத்திலநெற்றிமுதலியபன்னிரண்டிடங்களிலும் திருமண்பிரகாசிக்கமார்பில் யக்ஞோபவீதமும் துளசிமணிதாள்வடமும்பத்மாட்சமாலையும் அசைக்கடஸ்ரீராமதாரகமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு ஸ்ரீஉமேஸ்வரனைப்போலச்சூதபுராணிகர் எழுந்தருளினர் அவரையுயர்ந்தஆசனத்திலே

ழுந்தருளச்செய்துமுக்குணங்களுள ஒவ்வொன்றுக்கும் அவ்வாராகிய பதினெண்புராணங்களையும் அறிந்த ஞானவிற்பனன்ரோஷர்ருண்ணி யபரப்பிரமாவானவர் தம்முடையதிருவடியைத் தஞ்சமெனப்பற்றி னவர்களுக்கும் தம்மைவைதவருக்கும் தம்மோடெதிர்த்துப்போர் செய்தவர்களுக்கும் நிரதிசயானந்த முத்தியைத்தமது ஜாயமானக டாட்சத்தினால் தயைசெய்யும்படித்தேவகியினுடைய வயிற்றில் தம திச்சையால் திருவவதாரஞ்செய்தனரன்றோ அவ்வேத முதல்வனுடை ய திவ்வியசரித்திரத்தைச்சொல்லி எங்கள்யாவரையும் முத்திக்கரை சேர்ப்பிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்கின்ற நைமிசாரணியவாசிக ளாகிய முனிவர்களைப்பார்த்துச் சூதபுராணிகர்சொல்லுகிறார்சன்ன சமுத்திரத்தைக்கடந்து முத்திக்கரையைச் சேர்வதற்கு ஓடமாகியஸ்ரீ கிருஷ்ணசரித்திரத்தைச் சொல்லுதல் அஜசங்கரர்களாலுமுடியாதெ ன்றால் என்னால்முடியுமோ ஆயினும் ஸ்ரீவேதவியாசபகவானுடைய கடாட்சவீட்சணத்தால் சிறிது சொல்லுகிறேன்கேளுங்கள்முனீஸ்வர களேசரஸ்வதிநதிதீர்த்தத்திலே ஸ்ரீவேதவியாச முனீந்திரர் உலகத்தா ருடையமனந்தெளியும்படிவேதங்களை வகுத்துப் புராண நூல்களாகி யபாரதத்தைச்சொன்னேனும் யாதுகாரணத்தாலோ நம்முடையவிருத யந்தெளிவை யடையவில்லையேயென்று நினைத்துக்கொண்டிருக்குஞ் சமயத்தில் நாரதபகவானெழுந்தருளினார் அவரைப்பார்த்து இதைச் சொல்ல அம்முனிவர் ஸ்ரீசர்வேஸ்வரருடைய திவ்விய சரித்திரத்தை ச்சொன்னாலல்லாமல் உமமுடைய மனந்தெளிவையடையமாட்டாதெ ன்றுசொல்ல அப்படியே ஸ்திரிஹரியினுடையசரித்திரத்தைத் தமது திருக்குமாரராகிய சுகப்பிர்மரிஷிக்குப்பிரகாசித்தருளினார் அவர் அபி மன்னியப்புத்திரனாகிய பரீட்சித்துமகாராசனுக்குச்சொல்லியருளினார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரீட்சித்துமகாராசனே நபனுடைய புத்திரனாகியநாபா கன்குருகுலத்திலே வாசம் பண்ணிக்கொண்டிருக்கும் சமயத்திலே அவனுடையபிராதாக்கள் அவனைநைஷ்டிகப்பிர்மசாரியென்று நினைத் துக்கொண்டு தாங்கள்மாத்திரமேதாங்கள் பிதிரார்ச்சிதமாகியதனத்தை ப்பங்கிட்டுக்கொண்டார்கள் பிற்பாடு வித்துவானாகியநாபாகனென்பவன் குருகுலத்திலிருந்துவந்து தன் அண்ணன்மார்களைத்தன் பாகத்தைக் கேட்க அவர்கள்உனக்கு பிதாவைப்பாகமாக வைத்திருக்கின்றோமென் றுசொன்னார்கள் அந்தவார்த்தையைப் பிதாவினிடத்திலேசொல்ல அ தற்குப்பிதாவானவர் நகைத்துவாராய் சத்தியவிரதனாகிய நாபாதன அவர்களசொல்லே யதார்த்தமென்று நம்ப வேண்டாம் உன்னைவஞ்சித் தார்கள் ஆயினும அவர்கள் என்னை உனக்குப்பாகமாகவைத்தபடியினா

லே நான் உனக்குச் சிவனோபாயத்தை உபதேசிக்கிறேன்கேளாய்இப்போது அங்கிரசரிஷிகள் சத்திரயாகம் பண்ணுகிறார்கள் அந்தயாகத்திலே ஆறுநாள்செய்யும்வைதிககர்மத்தில் சொல்லவேண்டிய வேதபாகம் இன்னதென்று அறியாமல் மயங்கியிருக்கிறார்கள் அந்தயோகீஸ்வரர்களுக்கு வைசுவதேவசூக்தங்களிரண்டையும் நீபோய்ப்பாடஞ்செய்வித்தால் அந்தஉபகாரத்துக்காக அவர்கள்சத்திரயாகஞ்செய்து முடித்து மீந்ததனத்தை உனக்கேகொடுப்பார்கள் ஆகையால் அவர்களிடத்துக்கு நீபோவென்றுசொல்ல அதுகேட்டு நாபாகனானவன்அந்த அங்கிரசரிஷிகளிடத்திற்குப்போய் அப்படியேசெய்தான்அங்கிரசுக்களும் யாகத்தைமுடித்து அங்குமீதியானத்தை நாபாகனுக்குக்கொடுத்து விட்டுச் சுவர்க்கத்தை அடைந்தார்கள்.

அசேசத்துஷ்டனால் அங்கிருக்கதனத்தையெடாநின்றநாபாகனிடத்திலே கறுத்துச்சிவந்திருக்கின்ற நிறத்தையுடைய ஒருபுருஷனானவன் வடதிசையிலிருந்தோடிவந்து இந்தயாகவஸ்துக்களிலே இருக்கிறதனமெல்லாம் என்னுடையதென்று தடுக்க அதற்கு நாபாகனானவன் ரிஷிகள்எனக்குக்கொடுத்தார்களேயென்றுசொல்ல அதுகேட்டு அந்தக்கிருஷ்ணபிங்கவர்ணனாகிய புருஷன் உன்னுடைய பிதாவைக்கேட்டறிந்து கொள்ளென்ன அப்படியே நாபாகனானவன்போய்த்தன்பிதாவைக்கேட்க அந்தநாபாகனானவன் சொல்லுகிறான் வாராய்புத்திரனே தேவர்களோடேசமமாக அவிர்ப்பாகமுண்ணக்கூடாதுயாகமுடிந்தபின்னே மீந்திருப்பதைஉண்ணக்கடவனென்றுஸ்ரீசங்கரபகவான் தட்சப்பிரசாபதியினால சபிக்கப்பட்டதுமுதல்வைதிகராமரிஷிகள் யாவரும்யாகத்திலே மீந்துபோன தனங்களெல்லாம் அந்தச்சங்கரபவானுடைய பாகமாக முன்னமேசெய்திருக்கிறார்கள் ஆகலால் கறுத்துச்சிவந்திருக்கிற புருஷனே அதற்குஉடையவனென்றுசொல்ல நாபாகனும் அந்தப்புருஷனண்டைவந்து பிராமணஞ்செய்து வாராய பிரமஸ்ரேஷ்டராகிய ஸ்ரீருத்திரபகவானே இந்ததனமெல்லாம் உம்முடையதேயென்று எனபிதாவானவர்சொன்னார் என்னை க்ஷமிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க அந்தபாகனைப்பார்த்து வாராய் நாபாகனே உன்னுடையபிதாசொன்னதர்மத்தை நீயதார்த்தமாகவே சொன்னபடியால் எப்படிப்பட்ட ஆபத்துவந்தபோதிலும் அசத்தியத்தைச் சொல்லாமலிருக்கக்கடவாய் இந்தனத்தையும் நீயேஎடுத்துக்கொண்டுபோவென்றுசொல்லிச் சத்தியவத்சலனாகிய ஸ்ரீபரமசிவனானவர் அந்தர்த்தானமாயினர் இந்தநாபாக உபாக்கியானத்தை எவன்பிராதகாலத்திலும சாயங்காலத்திலும் சித்தசமாதானத்தோடேஸ்மரிக்கிறானோ அவன்மந்திரநிபுணனாயு மெய்ஞ்ஞானியாகவும் சீவித்திருந்துஉத்தமமானநிலையை அடைவான அந்தநாபாகனுக்கு அவன்செய்ததபோ

பலத்தால் ஸ்திரீஹரியினிடத்திலேயே பாரதந்திரஞானமுடைய பாகவதோத்தமனாகிய அம்பரீஷனென்றொரு புத்திரனுண்டானால் அந்தப் புத்திரனைப் பிரமருத்திராதிகளிடத்திலும் வியர்த்தமாகாத பிர்மசாபமானது தீண்டாமற்போய்விட்டதென்று சொல்லுகின்ற சுகப்பிர்மரிஷியைப்பார்த்துப் பரீட்சித்துமகாராசன் சொல்லுகிறான்.

ஸ்திரீர்முநிச்ரேஷ்டரே ஒருவராலும் அதிக்கிரமிக்கக்கூடாத பிர்மசாபமானது எந்தப்புருஷ சிரேஷ்டரிடத்திலே காரியகரமாகாமற்போச்சோ அந்த அம்பரீஷருடைய திவ்வியசரித்திரத்தைச் சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்தியாநின்ற பரீட்சித்துவைப்பார்த்து ஸ்திரீசுகப்பிர்மரிஷியானவர் சொல்லுகிறார்,

வாராய் அபிமன்னியபுத்திரனே மகானுபாவனாகிய அம்பரீஷமகாராச இந்தப்பூமண்டலத்தை ஏகசக்கிராதிபதியாக ஆளுகின்ற ஆதிபத்தியத்தையும் அளவில்லாத சம்பத்தையும் பெற்றிருந்தும் உலகத்திலே யாவரும் விரும்பத்தக்க அந்தச்சம்பத்துகளெல்லாம் சொர்ப்பனத்திலேகாணப்பட்ட வஸ்துவைப்போல் அநித்தியமென்றெண்ணிச் சர்வேஸ்வராகிய ஸ்திரீஹரியினிடத்திலும் அவருடைய திருவடியொன்றே தஞ்சமெனப் பற்றிய சற்புருஷனிடத்திலும பரமமான பக்தியை அடைந்து அந்தப்பக்தியினாலே இந்தப்பிரபஞ்சமெல்லாம் ஓட்டாங்குச்சுக்குச் சமானமாக நிச்சயத்துத் தன்மனதை ஸ்திரீ கிருஷ்ணருடைய பாதாரவிந்தங்களிலும் வாக்கைஸ்திரீ பரமபதவாசியினுடைய கீர்த்தனங்களிலும் கைகளை ஸ்திரீயப்பதியினுடைய ஆலயங்களில் திருவலகிடுதல்முதலிய வியாபாரங்களிலும் காதுகளை ஸ்திரீ அச்சதருடைய சதாசிரவணத்திலும் நேத்திரங்களை ஸ்திரீமுகுந்தருடைய அர்ச்சாவதார திவ்வியமங்கள விக்கிரகத்தைச் சேவிப்பதிலும தொக்கிந்திரியத்தைப் பாவர்களுடைய திருமேனியைப் பரிசிப்பதிலும் நாசிகையை பரந்தாமருடைய சரணாரவிந்தங்களில் அர்ச்சிக்கப்பட்ட திருத்துழாய்ப் பரிமளத்திலும் நாவை ஸ்திரீ சர்வேஸ்வரருக்கு நிவேதனஞ்செய்த அன்னமுதலானவைகளிலும பாதங்களைத் திரிவிக்கிரமருடைய ஆலயத்தைக்குறித்த பிரயாணங்களிலும தலையை ரிஷிகேசருடைய திருவடியை வணங்குவதிலும் இச்சையை விஷயங்களிலே போகவொட்டாமல் ஸ்திரீவாசுதேவருடைய கைங்கரியத்திலும் செலுத்தித் தான் செய்யுஞ் செய்கைகளையெல்லாம் ஸ்திரீ புருஷோத்தமர் அகண்டாகபரிபூரணராயிருக்கிறாரென்னும் அபிப்பிராயத்திலே சமர்ப்பித்து ஆதிரிஹரிராசர்கள் கட்டளையிபடிப் பூமியைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தான்.

ஒருகாலத்திலே தன்பிரதேசத்தில் சலங்கிடையாமற் போய்விட வசிஷ்டர் கௌதமர்முதலிய பரமரிஷிகளைக்கொண்டு செய்யப்பட்ட

அசுவமேதயாகத்தாலே சகலயாகங்களுக்கும் அதிஷடாதாவாயும சர்வஜ்ஞனாயும் விளங்குகின்ற ஸ்திரிபுருஷோத்தமரை ஆராதித்துச் சரஸ்வதியை வரும்படிச்செய்த அந்தராஜரிஷியாகிய அம்பரிஷராஜனுடைய யாகசாலையிலிருந்த இருத்துவிக்குகள் யாவரும் கண்களிமையாதவர்களாயும் விலையேறப்பெற்ற வஸ்திராபரணபூஷிதர்களாயும் தேவர்களோடும சமானரூபர்களாய்க் காணப்பட்டார்கள் அவனால் அனுவர்த்திக்கப்பட்டுந் தேவாந்தரங்களைவிட்டு விலகி ஸ்திரீபகவானுடைய அநந்தகலியாண குணனுபவங்களைச்செய்கின்ற ஜனங்களெல்லோரும் பிரளயத்திலே அழிந்துபோகத்தக்க பிரமருத்திராதி சமஸ்ததேவர்களுடைய பதவிகளையும் பிரார்த்தியாமல் சித்தர்கள் கொடுகின்ற விபவங்களையும் வெறுத்து ஸ்திரீமுகுந்தனையே இருதயகமலததில் சாக்ஷாத்கரித்துச் சொரூபானுபவத்திலே திருப்பியடைந்திருந்தார்கள் இப்படியாவரையும் அனுவர்த்திக்கச் செய்துகொண்டு தான்வீடுபெண்டு பிள்ளைகள் ரதகஜதுரகபதாதிகள அளவில்லாத பொக்கிஷம் இவைகளிலுண்டாகிய பற்றுக்களையொழித்துக் கர்மயோகபக்தியோகங்களினாலே ஸ்திரிஹரியைச் சந்தோஷிப்பிக்கச்செய்து வருவதுமல்லாமல தனக்குசமானமான சிலத்தையுடையபாரியோடு ஒருவருஷகாலம் துவாதசியை ஆசரிக்கவேணடுமென எண்ணங்கொண்டு தசமி ஏகாதசிதுவாதசிகளைச சாஸ்திரவிதிப்படி யநுஷடித்துக்கொண்டு வருகிறநாளில அந்தமகானுபாவனானவன் கார்த்திகைமாசத்தில் யமுனாதீரத்தையடைந்து அந்தவிரதத்தினுடைய முடிவாகிய கிரமப்படி மூன்றுநாளும் உபவாதமிருந்து யமுனாநதியில்ஸ்நானஞ்செய்து அங்குள்ள மதுவனத்திலே ஸதிரீசர்வேஸவரராகிய பரந்தாமரைத்திருமஞ்சனமாட்டிக் கந்தபுஷபாதிகளால் அலங்கரித்து நானுவிதமதுர பலவர்க்கமுதலானவைகளை நிவேதனஞ்செய்து பாகவதோத்தமர்களாகிய யோகிகளையும் பிராமணர்களையும் பூசித்துக் கொம்புகளுக்குத் தங்கப்பூணும் குளம்புகளுக்கு வெள்ளிப்பூணும பூட்டிக்கழுத்துக்குச் சொர்ணபரணங்களையணிந்து பட்டுவஸதிரங்களைத்தரித்து நல்லரூபமும் சாதுவுமாகியஅறுபதகோடிதல யீற்றுப் பசுக்களைக்கறவைப்பாத்திரமுதலிய உபகரணங்களோடு தானம்பண்ணி அவர்கள் அறுசுவைப்பதார்த்தங்களுடன் திவ்விய அன்னத்தைப்புசிக்கச்செய்து அவர்களுடைய அனுமதியைப்பெற்று ராஜரிஷியாகிய அம்பரீசமகாராச துவாதசி பாரணைபண்ண யத்தினமாயிருக்கும்போது ஸ்ரீசக்கரபகவானுடைய அமிசமாகிய துருவாசரானவர் அதிதியாகவந்தார்.

அதிதியாகவந்த அந்தமகாமுனியை எதிர்கொண்டுபோய்அரககியாதி உபசாரங்களைப்பண்ணிப் பூசித்துத்தன் கிரகத்திலே புசிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான் அந்தப்பிரார்த்தனையை யங்கீகரித்து இவனுடைய விரதத்தைப்பங்கஞ் செய்யவேணடுமென் றெண்ணங்கொண்டு நித்தியகர்மத்தை முடித்து வருகிறேனென்றுபோயயமுனாநதியிஸ்

தீர்த்தமாடிப் பாரணைப்பொழுது தவறிப்போம்படி அங்கேயிலேயொளி த்திருந்தார் அப்போது துவாதசிபாரணைக்கு அரைமுகூர்த்தகாலமா த்திர மிருக்கிறபடியால் சிலரையனுப்பி அந்தத்துருவாச மகாரிஷியை த்தேடி அழைத்துவரும்படி உத்திரவுசெய்ய அவர்களெங்கும்போய்ப் பார்த்துங்காணுமல் வந்துவிட்டனர்கள் அதனால் மனநிலை கிலேசம டைந்து அம்பரீஷமகாராசனெனவன் அங்கிருந்த முனிவர்களைப்பார்த் து வாரீர் யோகீஸ்வரர்களே அதிதியாகவந்த பிராமணோத்தமனை வி ட்டுப்பாரணை செய்தால் பிராமண அபசாரதோஷஞ் சம்பவிக்குமே துவாதசிபாரணை காலந்தப்பிப்போனால் மகாதோஷம் சேரிடுமே ஆ கையால் இந்தஇரண்டுதோஷங்களில் ஒன்றும் சேராமலிருக்கும்படி அடியேன் முன்னோர்கள் அயனதுல்லியமாகவும் உபவாசதுல்லியமாக வுஞ்சொல்லியிருக்கிறசலியாணம்பண்ணுகிறேனென்று அவர்களுடைய அனுமதியைப்பெற்று ஸ்ரீபகவானைத்தியானஞ்செய்து திருத்துழா உ தவுமுண்டு துருவாசருடைய வரவை எதிர்பார்ததுக்கொண்டிருந் தான்.

உடனே துருவாசரும் தீர்த்தமாடித் துவாதசஊர்த்தவ புண்ட ரங்களைத்தரித்து மந்திரராஜமாகிய திருமந்திரத்தைசெபித்து நித்தியக டனைமுடித்துக்கொண்டு சீக்கிரத்திலே அந்தமகாராஜனிடத்தில்வந்து அவன்துளசிதீர்த்தம்பானம்புண்ணியத்தையறிந்து யுகாந்தகாலருத்தி ரபகவானைப்போல் அதிககோபத்தையடைந்து தமக்கெதிரே அஞ்சலி பந்தஞ்செய்து நிற்கின்றமகானுபாவனுகிய அம்பரீஷமகாராஜனைப்பார் த்து வாராய் அம்பரீஷனே இகலோக ஐஸ்வரிய கர்வதினாலே உன்ம த்தனுகி ஸ்ரீவிஷ்ணுபக்தி இல்லாதவனுக இருந்தும் பாவத்பக்தனுக உன்னை நீயேநினைத்துக்கொண்டு அதிதியாகவந்த என்னை அங்கீகரி ப்பதைப்பார்க்கிலும் உயர்ந்த விரதமுமுண்டென்று நினைத்துநீசெய்த துவாதசி பாரணையின்பலத்தை இதோ காண்பிக்கிறேனென்றுசொல்ல அம்பரீஷமகாராஜன் திருத்துழா யுதகமுமுண்டேனேயல்லாமல் உம்மை அவமதித்துப் புசிக்கவில்லை யென்று வேண்டிக்கொண்டனன் அ தையும்பாராமல் அங்கிருந்தமுனிவர்களும் மற்றவர்களும் திக்கிட்டு ப்பயப்படும்படித் தன் ஜடாமகுடத்தில் ஒருசடையைப்பிடுங்கிஇந்தச்ச டையில் உற்பவிக்கும பூதத்திற்கு நீஇரையாகக்கடவாயென்று சபித் து அந்தச்சடையைப்பூமியிலெறிந்து மந்திரித்துச் சாபசலத்தைவீ சினார்.

அந்தமகாராஜனெனவன் இதற்கு நம்மால் செய்யத்தக்கதொன்று மில்லையென்று! சர்வேஸ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைத்தியானஞ்செ

ய்துகொண்டிருந்தனன் உடனே அந்தச்சபையிலிருந்து பயங்கரரூபத்தையுடைய கிருத்திமமானது புறப்பட்டுகையிலே சூலத்தைபிடித்துத் தேசோராசியை இருட்படலமானது வெல்ல உத்தேசித்துப்போவதுபோலப் பரிசுத்தமனசையுடைய அந்தப் பாகவதோத்தமனைக்கொலைசெய்யக்குறித்து விரைந்தோடிவந்து அங்கேயிருந்தயாவரும் அந்தப்பூதத்தைக்கண்டு பிராணபீதியுடையவர்களாய்த்திக்குவிதிக்குகளிலோடினர்கள் ஸ்ரீவைஷ்ணவபரமோபாயநிஷ்டனுகிய அம்பரீஷமகாராஜனொருவனும் துருவாசமகாரிஷியினுடைய சாபத்துக்கும் அவராலேவப்பட்டுவருகிற பூதத்துக்குமெல்வளவுஞ் சலிக்காமல் நிர்ப்பயனாய்ஸ்ரீவாசுதேவரைத் தியானஞ்செய்து கொண்டிருந்தனன் உடனே சர்வேஸ்வரராயும் சர்வாந்தர்யாமியாயும் சர்வநியந்தாவாயும விளங்காநின்ற ஸ்ரீஹரியினுடைய அடியார்களுக்குச்சித்தநித்யகாலமுஞ்செய்யுமவர்களை நாசஞ்செய்வதே தொழிலாகவுடைய ஸ்ரீசுதரிசனமென்னுந் திருநாமங்கொண்ட ஆயுதராசமாகிய சக்கரமானது மனோவேகமும் பின்னிடும்படி அநந்தமாயிரஞ் சூரியர்களைப்போலக் கிரணராசிகளைப்பரப்பிக்கொண்டு விரைந்துவந்து அந்தக்கிருத்திமத்தைத்தன் கிரணதீக்ஷணத்தாலே சாம்பலாக்கிவிட்டு அதையேவிய துருவாசரைக்குறித்துவரும்போது அந்தச் சுதரிசனத்தின் வரவைக்கண்டு நடுங்கி இதென்ன நம்முடைய பிரயத்தினமும நிஷ்பலத்தையடைந்து விபரீதமாய்முடிந்ததேயென்று கிலேசத்தையுடையவராய் உயிர்தப்பினல் போதுமென்றுகல்லன்னத்தோடோடி மேருமுதலியபர்வதகுகைகளிலும் சமுத்திரமுதலிய ஜலப்பிரதேசங்களிலும் பாதாளத்திலும் சுவர்க்கத்திலும் சென்று ஒளித்துக்கொண்டாலும் அங்கேயெல்லாம்பின்சென்றுதுரத்திச சர்ப்பத்தைப்போலச்சீறி அக்கினிச்சுவாலைகளை வீசிக்கொண்டுவருவதைப்பார்த்து ஸ்ரீகயிலாயத்துக்குச்சென்று பரசிவமூர்த்தியினிடத்தில் சரணாகதஞ்செய்ய அந்தருத்திரபகவானவர் சொல்லுகிறார்.

வாரீர்முனீந்திரரே நாமெல்லோருமவசிக்காநின்ற இந்தப்பிரமாண்டமும்இதுபோன்ற அநேக அண்டசமூகங்களும் எந்தப்புருஷோத்தமனிடத்தில் உற்பவித்துமறுபடியும் காலாந்தரத்திலலயமடைகின்றதோ அந்தசர்வசுவாமியினுடைய பக்தனிடத்தில் அபசாரப்பட்ட உம்மைரட்சிப்பதற்கு நானும் தக்ஷமுதலாகிய நவபிரஜாபதிகளும் சனற்குமாரநாரதர்முதலிய ருஷிகணங்களும் சமர்த்தர்களெல்லோரும் உனக்கும் மற்றலோகேஸ்வரர்களுக்கு வேண்டிய ஆயுதங்களை யநுக்கிரகஞ்செய்கின்ற ஆயுதராஜமாகியஇந்தச்சக்கிரத்தினுடைய தீக்ஷணத்தை

யே நாங்கள்சகிக்கமாட்டோமென்றால் உம்மைநாங்க ளெப்படி ரட்சிக்
கப்போகிறோமென்று சொல்லியருளினர் அந்தச்சக்கராயுதவானிடத்தி
ல்செலவுபெற்றுக்கொண்டுமகாமேருவிற் போய்ச்சதுர்முகனை அடை
க்கலமடைந்தன ரென்றுசொல்லுகின்ற ஸ்ரீசுகப்பிர்ம ருஷியைப்பார்த்
துப்பரீட்சித்துமகாராசன்சொல்லுகிறார்வாரீர்முனிராசரே மனோவே
கமும் முன்னிடத்தக்க வேகமுள்ளச்சரமானது அந்தத் துருவாசருக்
குப்பின் சென்றுகாலதாமதஞ் செய்வதற்குக்காரண மென்னென்று
கேட்கஸ்ரீசுதர் சொல்லுகின்றார்வாராய்நேர்திறனுடையபரீட்சித்துமகா
ராஜனே அந்தத்துருவாசரானவர் பிராணபீதியடைந்து முதுகுகாட்டி
யோடுவதினாலும்சர்வேஸ்வரருடைய அடியார்கள் விஷயத்திலேசெய்
த அபசாரத்தை அவர்கள்பாதத்துமன்னித்தா லொழியவேறேதிக்கில்
லாமையையும் அவர்களுடைய பிரபாவத்தையும் யாவருமறிந்துக்கொ
ள்ளவேண்டுமென்கிற எண்ணத்தினாலும் சுதரிசனமானது அந்தத்து
ருவாசருக்குப் பின்னேதானே சென்றதென்று சொல்லிமுடித்துவிட்டு
சுகாரனவர்துருவாசரைக்குறித்துச் சொல்லுகின்றார் வாராய்பரீட்சித்
துமகாராஜனேதன்னையடைக்கலமடைந்த துருவாசமகாரிஷியைப்பா
ர்த்துப்பிரமதேவன்சொல்லுகின்றார் வாராய்குழந்தாய் சகலாண்டங்க
ளும்ஓரண்டத்துக்குப்பட்டஎனக்குஇருப்பிடமாகியசத்தியலோகமும்
திவிபார்த்தமென்னப்பட்ட என்னுடையஆயுளின் பூர்த்தியாகிய தம்
முடையலீலையின் முடிவிலேதசிக்கவேண்டுமென்றுகாலரூபியாகிய ஸ்ரீ
பகவானுடையபுருவ நெரிப்புமாத்திரத்திலேநாசத்தை யடைந்துபோ
ம்நானும்ருத்திரனும் இந்திரனும்தக்ஷன் முதலியபிரசாபதிகளும்சமஸ்
ததேவர்களும் அவருடைய கட்டளைக்குள்ளடங்கிச் சுதரிசனலாஞ்ச
னையைச்சிரசிலே பெற்றுக்கொண்டு லோகேஸ்வரர்களா யிருக்கிறோம்
அந்தச்சர்வசுவாமியினுடைய பக்தனுக்குத்தீமைசெய்த உன்னைக்காப்
பாற்றஎன்னால் முடியுமோமுடியாது ஆகையால்சர்வேஸ்வரரையேசர
ணாகதஞ் செய்யென்றுபிரம தேவனாலேதிரஸ் கரிக்கப்பட்ட துருவாச
ரானவர் திருப்பாற்கடலின் வடபக்கத்திலே நின்று புருஷசூக்தத்திலே
பாததாமரையைத்தியானித்து அச்சுத அனந்த யாதவா சற்புருஷர்களுக்
குஇஷ்டநாயகா அபராதியாயஎன்னைரட்சிக்கக்கடவீர் உமது அடியா
ர்களுடையசகஸ்திரநாமங்களிலொன்றை யுச்சரித்தவர்கள் நரகதுக்கத்
திலிருந்துவிடுபட்டு நித்தியானந்தத்தை யடைவார்களன்றோ இப்போ
து அடியேன்படுகின்றசஞ்சலத்தைநிவாரணஞ் செய்தருளவேண்டுமெ
ன்று நானாவிதமாய்ப் பிரார்த்தியாநின்ற துருவாசருக்கு சர்வேஸ்வ
ரானவர் பிரசன்னரூபராய்வந்து திருவாய்மலர்ந்தருளுகின்றார்.

வாராய்துருவாசனே ஸ்திரீகள்புத்திரர்கள் தனம்கிருகம் ஆப்தர்கள் இகலோகபரலோக சௌக்கியங்கள் இவைகளெல்லாவற்றிலும்பற்றில்லாமலென்னையேமுக்கியபதியாக நாமிச்சரணாகதஞ் செய்திருக்கிறவர்களைவிட்டுநான் எங்கேயாவதுபரம கருணாரூபியாயும் பிராணபதமாயும் என்மார்பின்கணிருக்கின்ற லட்சுமியையாவது அபேட்சிக்கிறதில்லைசம் புத்தியுள்ளஎன்னிடத்திலேயே ஸ்திரமான இருதயத்தையுமுடைய அடியார்கள் அனுகூலனாகிய தன்பர்த்தாவைக் குலஸ்திரி தன்னொழுக்கத்திலே தன்வசப்படுத்திக்கொள்வதுபோல என்னைத்தங்கள் வசப்படுத்திக்கொள்வார்கள் அவர்கள்என்சேவையினால் திருப்தியடைவார்களேயல்லாமல் என்சேவையால் அடையப்படுகிறசாலோக்யமுதலியசதுர்விதமோக்ஷங்களையும் இச்சியார்கள் ஆகையால் சிலகாலத்திலேநாசத்தையடைகின்றஐஸ்வரியத்திலே அவர்களுக்குவிருப்பமில்லையென்று சொல்லவும்வேண்டுமோஎன்னுடைய இருதயத்திலே அவர்களும் அவர்களுடைய இருதயத்திலே நானும்எப்போதும் வாசமாயிருப்போம் அவர்களாலேவசீகரிக்கப்பட்ட மனதையுடையவனாகவும் அவர்களிடத்திலேபிரியனாகவும்இருக்கின்றஎன்னைவிட்டு வேறொன்றையும்அவர்கள் அறிகிறதில்லைநானும் அவர்களைவிட்டுமற்றொன்றையும் எவ்வளவும் அறிகிறதில்லை வேதங்களுக்கும்விரிஞ்சிவாதிகளுடையஞானகோசரத்துக்கும் எட்டப்படாத நான்பராதந்திரமானயானையைப்போலப் பக்தபராதீனனாகவிருக்கின்றேன் ஆதலினால் என்னிடத்திலிருந்து உனக்கு உபத்திரவம் உண்டாயிற்று அவனையேசீக்கிரமாக அடையக்கடவாய்பிராமாதிகளாகிய சாதுக்களிடத்திலே பிரயோகிக்கப் பட்டதவப்பிரபாவமானது பிரயோகஞ் செய்தவனுக்கே அமங்கலத்தை யுண்டாக்கும்பிராமணர்களுக்குச் சிரேயஸ்கரமாகியதபசுவித்தை இந்தஇரண்டும் விநயமில்லாத அங்கீகரிக்கில் அனர்த்தகரமாயிருக்கும் வாராய்ருத்திராம்சனாகிய துருவாசனே உனக்குமங்களமுண்டாகக்கடவது நாபாகபுத்திரனாகிய அம்பரீஷனையடைந்து அந்தமகாநுபாவனிடத்தில் க்ஷமைகேட்டுக்கொள் அப்போது இந்தச்சக்கிரசனத்தாலே உனக்குயாதொரு பத்திரவமுமுண்டாகாதென்றுதிருவாய்மலர்ந்தருளிச்சர்வேஸ்வரரானவர் அந்தர்த்தானமாயினர்.

வாராய்ப்பரீட்சித்துமகாராசனே இந்தப்பிரகாரம்பகவானாலேகட்டளையிடப்பட்டவராய்த்துருவாசரானவர் அபுகாரசுமாகியவிஷ்ணுசக்கரத்தினுடைய கிரணங்களினால் தம்முடையதேகமெலிந்தவடி அம்பரீஷமகாராஜாவினுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு நான்

தன்னுடையகால்களைப் பிடித்துக்கொண்டதினாலே அவர்முன்செய்ய அப்போது அம்பரீஷமகாராஜன் அந்தத்துருவாச மகாருஷியால் செய்த அபசாரத்தை க்ஷமித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தன வியாபாரத்தைஎவ்வளவும்நினையாமல்மிகவும் இலச்சையுடையவனாய் அவ்விடத்திலேஅதிகதயையைவைத்துஸ்ரீஅரியினுடையசக்கரத்தைத்தோத்திரம்பண்ணினான்.

## அம்பரீஷன் தோத்திரம்.

வாரீர்சுதரிசனரே அக்கினியுஞ்சூரியனும்சந்திரனும் உம்முடையசகஸ்திரபாகங்களிலொருபாகமன்றோபிரிதிவி அப்புதேயுவாயுஆகாசங்களும் சப்தாதிவிஷயங்களும் சுரோத்திராதி இந்திரியங்களுமதேவரீரேயன்றோஉம்மைக்குறித்து அவரவர்கள்செய்த தவத்துக்குத்தக்கவாறையே பிர்மருத்திரேந்திராதிகளுக்குத்தண்டஞ்சூலம்வசிரமுதலியஆயுதங்களைத்தயைசெய்கின்ற தயாசீலராகிய ஆயுதராசரே அச்சுதகிங்கரரே உனக்குப்பிரமாணமுஞ்செய்கிறேன்சமஸ்த சத்துருக்களையுந்தகிக்கிறசகஸ்திரசுவாலைகளையுடையவரேபிராமணனுக்குமங்களமுண்டாகும்பொருட்டு உம்மைச்சரணமடைகின்றேன்தர்மமும்தைரியமும்சத்தியமுஞ்சர்வயாகங்களையும் புசிக்காநின்ற யாகமூர்த்தியும் சமஸ்தலோகபாலரும் சர்வாத்துமாவுந்தேவரீரேயன்றோவாரீர்பரமபுருஷோத்தமருடையசத்தியாய் வியங்காநின்றசுராடரேசகலவைதீகதர்மங்களுக்குமஆதாரமானவரே அதர்மத்தையேசுபாவமாகவும் அசுரர்களுக்குச்சங்காரகர்த்தரேசகலசராசரங்களையும் ரட்சிக்காநின்றஆச்சரியகரமாகிய திவ்யசரித்திரத்தையுடையவரே உம்மைஅடைக்கலம் புகுகின்றேன்பரிசுத்ததர்மமயமானஉம்முடைய தேஜசினாலேஅஞ்ஞானஅந்தகாரமெல்லாம்போக்கப்படுகின்றன மகாத்துமாக்களுடையநேத்திரங்களுக்கு ஞானப்பிரகாசமுண்டாகாநின்ற வாரீர்வாக்குப்படியேஉம்முடையமகிமைஒருவராலும் அளவிடப்படாதகாரிய காரணரூபமாயும் உச்சநீசமாயுமிருக்கிற இந்தப்பிரபஞ்சமானது உம்முடையதிருவுருவமேயன்றோஒருவராலுஞ் செயிக்கக்கூடாமையால் அசிதனென்னுந்திருநாமத்தையுடையவரே சர்வேஸ்வராலேவீர் எதிர்பட்டபோது துஷ்டதைத்தியராக்ஷதர்களுடையசமூகங்களில் பிரவேசித்து அவர்களுடையதோள்வயிறுதொடைகால் கழுத்துமுதலியஅவயவங்களையெல்லாம்சேதித்துப்பிரகாசிக்காநின்றஜெகத்ரக்ஷகரேசர்வ வேகத்தையுமுடையவரே இப்படிப்பட்டநீர்பகவானுக்குத் துஷ்டநிக்கிரகத்தில்பொரு

ட்டேநியமிக்கப்படுகின்றீர் ஆகையால்அடியேங்களுடையகுலத்துக்கு
ப்பாக்கியபலா:பத்தின்போட்டுத்துருவாசமகாரிஷிக்கு நன்மைதனையளி
க்கக்கடவீர் அதுவேயெங்களுக்கு அநுக்கிரகமாகாநிற்கின்றது என்
னாலேதானம்பண்ணப்பட்டதும் யசிக்கப்பட்டதும் சுதர்மம்அனுஷ்டி
க்கப்பட்டதும்என்னுடைய குலமும் பிராமணர்களையேதெய்வமாகவு
டையதும் உண்டானால் இந்தத்துருவாசரிஷியானவர் உம்முடையகிர
ணவுஷ்ணத்தினின்றும் நீங்கினவராகக்கடவர்அனந்த கல்யாணகுணங்
களுக்கும்ஆசிரியமாகியபகவானொருவரே பரமாத்தும திஷ்டியினாலே
எனக்குச்சர்வபூதங்களிலும் ஆனவரானால்இந்தப்பிராமணர்சக்கரதாபத்
தினின்றும்விடப்படக்கடவரென்று இந்தப்பிரகாரந்தோத்திரஞ்செய்
யாநின்றராஜரிஷியாகிய அம்பரீஷருடைய பிரார்த்தனையினாலே துரு
வாசரைநான்குபக்கங்களிலும்தகிக்காநின்ற அந்தவிஷ்ணுவினுடைய
சுதரிசனமூர்த்தியானவர் சேத்திரங்களிலொருவனைப்பிரவசிக்கும்படிச்சாந்
தியடைந்தருளினர்பின்பு அந்தத்துருவாசமகாருஷியானவர்சுதரிசனமூ
ர்த்தியால் உண்டாகிய அக்கினிசாபத்தினின்றும் விடப்பட்டு க்ஷேம
த்தையுடையவராய் அம்பரீஷமகாராஜனை அமோகமான ஆசீர்வசனங்
களைச்செய்துதோத்திரம்பண்ணுகின்றார்.

## துருவாசர்தோத்திரம்.

வாராய்ராஜரிஷியே இதுமிகவும் ஆச்சரியகரமாயிருக்கிறது உண்
மைஅறிவு ஆனந்தமே திருமேனியாகவுடைய ஸ்ரீமந்நாராயணருக்குத்
தாசர்களாயிருப்பவர்களுடையமகாத்துமியத்தை இப்போது நான்ற
ன்றுயறிந்தேன் உன்விஷயத்தில் அபராதஞ்செய்தஎனக்கும்க்ஷேமத்
தையே கோரினீரன்றோ ஆகையினால்எவருடையதிருநாமத்தைக்கேட்
டமாத்திரத்திலேபுருஷன்நிர்மலனாககூடுமோ எவர்பக்தர்களாலேவசீ
கரிக்கப்படுகின்றாரோ அந்தப்பகவானுடையதாசர்களாகியமகாத்துமா
க்களுக்குஎதுதான்செய்யப்போகாது எதுதான் விட்டுவிடக்கூடாதது
எதுதான்வேண்டப்படுவதொன்றுமில்லைஎன்னுடையஅபராதத்தையு
ம்பாராட்டாமல்என்பிராணனைக்காப்பாற்றியதயாசீலரே யென்றுதுதி
த்தனர்.

## ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்அபிமன்யுபுத்திரனே இந்தத்துருவாசரானவர் அனுஷ்டா
னஞ்செய்துக்கொண்டு வருவாரென்கிற அபேக்ஷையினாலேபோஜனம்

பண்ணுமல்லாத்திருந்த அம்பரீஷரானவர் தம்மையிப்படித்தோத்திரஞ்செய்கின்ற துருவாசரிஷியினுடையபாதங்களைப்பிடித்துக்கொண்டு நீர்போஜனம்பண்ணவேண்டுமென்று கேட்டுக்கொள்ள அதற்குஉடன்பட்டுத்துருவாசரானவர் அம்பரிஷமகாராஜனாலே இடப்பட்டபோக்கியவஸ்துக்களோடு கூடிய அமிர்தமயமான அன்னத்தை புசித்துததிருப்தியடைந்து நீரும்போஜனம் பண்ணுமென்று சொல்லிவராய்மகாராஜரே பாகவதோத்தமாரகியஉம்முடைய தரிசனஸ் பரிசசம்பாஷணைகளினாலும் ஆதியகதிகளாலும் ஆத்மஞானத்தினாலும் நான்நன்முக அநுக்கிரகிக்கப்பட்டேன்சந்தோஷிக்கவும்பட்டேன் அதியற்புதமாயும்பரிசுத்தமாயுமிருக்கப்பட்ட உன்னுடைய சரித்திரத்தைச் சுவர்க்கலோகஸ்திரீகளும் அடிக்கடிக் கானஸ்பணவார்கள் பரம்புண்ணியமான உன்னுடையகீர்த்தியையும்இகபரலோகங் களிராவின்மஜனங்கள் யாவரும்புகழ்வார்களென்று இந்தப்பிரகாரம் துருவாசமுனிவர். அம்பரிஷுராஜருஷியைத் தோத்திரஞ்செய்து இவரிடத்திலே விடைபெற்றுக்கொண்டுககனமார்க்கமாய்ச் சென்றுபிரமலோகத்தைச் சேர்ந்தார்கேளாய்பரிக்ஷித்து மகாராஜனே அத்தூர்வாசரிஷியானவர் சுதரிசனமூர்த்தியினால்துரத்தப்பட்டுச் சகலலோகங்களிலுஞ் சஞ்சரித்துக்கொண்டு எவ்வளவுகாலம்வாராமலிருந்தாரோ அவ்வளவிலே ஒருவருஷம்பூரணமாச்சு அந்தஒருவருஷகாலமும் அம்பரிஷமகாராஜன் ஆகாரமாகதீர்த்தத்தையேபானஞ்செய்து கொண்டுஅதிதியங் கொடுக்கத்துருவாசமுனிவருடைய வருகையை எதிர்பார்த்திருந்து அவர்போஜனஞ்செய்துபோனபின்பு பரிசுத்தமானஷேஷத்தையே புசித்தான் அந்தப்பரமவைதிகவிஷ்டனுகிய மகாராஜன் துருவாசருடைய வியசனத்தையும் அதனுடைய விகாசத்தையும் நோக்கித்தன்னுடைய வீபத்தையும்ப்ரமபுருஷருடைய பிரபாவமாகவேஎண்ணிக்கொண்டான இப்படிப்பட்டஅநேகதிவ்வியகுணங்களை யுடையவனுகிய அம்பரிஷ ராஜருஷியானவர்மகரபரமாத்துமாவையும் அந்தகலியான குன்பரம்பிரமமாவும் விளங்காகின்ற வாசுதேவரிடத்திலே கிரியாகலாபங்களினலேநன்முகப்பக்தியைச்செலுத்திக்கொண்டிருந்தான் அந்தப்பக்தியினால்சத்யலோகமுதலான

உலகங்களெல்லாம்நரகத்துக் கொப்பாக எண்ணித்தனக்குச்சமா னகுணங்களுடைய புத்திரர்கள் வசத்திலே இராச்சியத்தைவிட்டுத்த போவனத்திலே பிரவேசித்துச்சத்துவரச தமுசுக்களையகியபிரகிருதி குணகாரியங்க ளெல்லாவற்றையு மொழித்து கேசவருடைய திருவடிக ளில் மனதைநிறுத்தித் தவஞ்செய்தான்.

இந்தப்புண்ணிய கரமான அம்பரிஷ உடைஞானத்தை யாவனொ ருவன் பக்தியினாலே புகழ்ந்து தியானமபண்ணுகிறானே அந்தப்புருஷசி ரேஷடன் பரமபாகவதாரவாரென்று சுகப்பிரமருஷி யானவர் பரிட்சித் துமகாராஜனுக்குத் திருவாய் மலர்ந்தருளினர் இதுசூதபுராணிகரால் நைமிசாரணிய மகாருஷிகளுக்குச் சொல்லப்பட்டது.

அமபரீஷ துவாதசிசரித்திரம் முற்றிற்று.

ஸ்ரீஅம்பரீஷாயநம:

சுகப்பிரமருஷியேநம:

விருத்தம்.

மாயன்வாழி மார்மங்கைவாழியே
தூயவையணவத் தொன்னெறிவாழியே
ஆயபத்தோடென் றருந்திதினவாழியே
வாயவன்னது நோற்பவர்வாழியே.

ஏகாதசிமகத்துவம்-முற்றிற்று.



ஸ்ரீகிருஷ்ணசகாயம்.